20

ஜனவரி ஒண்ணு
என்ன கிழமை
என்கிறீர்களா?
வியாழன்! கரெக்ட்?



| 1970ஆம் ஆண்டு காலண்டர் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| | 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| | 29 | 30 | 31 | ⊙ | ⊙ | ⊙ | ⊙ |
| பிப். மார். நவ. | ஞா | தி | செ | பு | வி | வெ | ச |
| ஜூன் | தி | செ | பு | வி | வெ | ச | ஞா |
| செப். டிசம்பர் | செ | பு | வி | வெ | ச | ஞா | தி |
| ஏப்ரல் ஜூலை | பு | வி | வெ | ச | ஞா | தி | செ |
| ஜனவரி அக். | வி | வெ | ச | ஞா | தி | செ | பு |
| மே | வெ | ச | ஞா | தி | செ | பு | வி |
| ஆகஸ்ட் | ச | ஞா | தி | செ | பு | வி | வெ |

அனுப்பியவர்:
வெங்கடரமணன்

# அந்திப் பொழுது

(ட்வைலைட்)

கம்போடிய இளவரசர் ஆதித் இந்தியாவிலிருந்து வரும் மாயா மகாராணியை வரவேற்கக் காத்திருக்கிறார்.

புதுடெல்லியிலுள்ள கம்போடிய தூதராலயத்தின் அவர் ராணுவ அதிகாரியாக இருந்தபோது இளவரசர் ஆதித்துக்கு மாயா மகாராணியிடம் பரிச்சயம் ஏற்பட்டது. மகாராஜா, மகாராணி இருவரையுமே கம்போடியாவிலுள்ள பழைமை வாய்ந்த அங்கோர் கோயிலைப் பார்த்து ரசிக்க வரவேண்டும் என்று அவர் அழைப்பு விடுத்திருந்தார்.

புதுடெல்லியில் பதவிக் காலம் முடிந்ததும் அவர் தன் சொந்த நாடான கம்போடியாவுக்குத் திரும்பிய சமயம், போதாத காலத்தின் கொடுமைப் பிடியில் இளவரசர் ஆதித் சிக்கித் தவிக்க நேரிட்டது. ஓர் இளம் சினிமா நடிகனுடன் அவர் மனைவி ஓடிப்போய்விட்டாள்.

கடுமையான மலேரியா அவரைப் பிடித்த ஆட்டிற்று. தனித்த பங்களாவில் அவர் சிகிச்சைகள் பெற்று வந்தார். கம்போடிய அரசாங்கம் ஸோப்ஹிப் என்ற நர்சை அவருக்குப் பணிவிடை செய்வதற்காக அமர்த்தியிருந்தது. ஸோப்ஹிப் அந்தரங்க சிரத்தையுடன் இளவரசைக் கவனித்து வந்தாள்.

இந்த நிலையில் மகாராணி மாயா இளவரசின் விருந்தினராக வந்து சேர்ந்தாள். ஒரு ஆண்டுக்கு முன்னால் தான் தன் கணவனை இழந்துவிட்டிருந்தாள் அவள். க்மர் நாகரீகத்தின் சரித்திரப்பிரசித்திபெற்ற சின்னங்களைச் சுற்றிப் பார்க்க மாயாவும் இளவரசர் ஆதித்தும் கிளம்பினார்கள்.

நர்ஸ் ஸோப்ஹிப்புக்கு இளவரசர் ஆதித்திடம் ஏற்கெனவே ஆழ்ந்த காதல் ஏற்பட்டிருந்தது. ஆனால் ஸோப்ஹிப்பின் மனத்தில் தான் ஏற்படுத்தியுள்ள சஞ்சலங்களை இளவரசர் அறிந்தவரல்ல.

விருந்தாளியாக வந்திருக்கும் மகாராணியைக் கவனிப்பதிலேயே அவர் அதிக கவனம் செலுத்துகிறார். மகாராணியின் பேரில் தான் காதல் கொண்டிருப்பதை இளவரசர் ஆதித் உணரத் தலைப்படுகிறார். மகாராணிக்கும் இளவரசருக்கும் இடையே உள்ள காதலை நர்ஸ் ஸோப்ஹிப் அறிந்து கொண்டதும் கிலேசமடைகிறாள்.

இளவரசர் ஆதித் மீண்டும் நோய்வாய்ப்படும்போது. இரவும் பகலுமாக மகாராணி அவர் படுக்கை அருகிலேயே அமர்ந்து பணிவிடை செய்ய முற்படுகிறாள். தான் கொண்டுள்ள காதலை ஆதித் வெளிப்படையாக மாயாவுக்கு உணர்த்துகிறார். இதை அறிந்து ஏமாற்றமடைந்த நர்ஸ் ஸோப்ஹிப் நீரில் மூழ்கி உயிர் துறக்கிறாள்.

இந்தியா திரும்பியதும் மகாராணி மாயாவிடமிருந்து இளவரசருக்கு ஒரு



ட்வைலைட்.

அசல் ராஜாவும்

கடிதம் வருகிறது. இறந்துபோன நர்ஸ் ஸோப்ஹிப்பின் எண்ணத்திற்கு மாருக தன் காதலைநிறைவேற்றிக் கொள் வதைத் தான் விரும்பவில்லையென்று மகா ராணி மாயா அந்தக் கடிதத்தில் குறிப் பிட்டிருந்தார்.

இளவரசை மீண்டும் சோகம் கவ்விக் கொள்கிறது. அந்திவேளையின் அஸ்தமன இருளில் கடற்கரையை நோக்கி அவர் நடையைக் கட்டுகிருர்.

இந்தக் கம்போடியப் படத்தின் சிறப்பு என்ன? கம்போட்டிய மன்னர் எடுத்துள்ள இந்தப் படத்தில் அந்த மன்னரே கதாநாயகனுக நடித்திருக்கிருர்.



அசல் ராணியும் நடிக்கும் திரைப்படம்



அவர் மனைவி மகாராணி மாயாவாகத் தோன்றுகிறார்!

# விசித்திரமான கிழவர்

(ஃ. பன்வி ஓல்ட் மேன்)

திரைவிழாவில் முதல் பரிசு பெற்ற படம் இது. செக்கொஸ்லொவாகிய தயாரிப்பு.

அபாய நிலையில் உள்ள பேராசிரியர் சைமக்கை ஆஸ்பத்திரியில் கொண்டு வந்து சேர்க்கிறார்கள். டாக்டர் பிரிவில் வெற்றிகரமாக ஆபரேஷனைச் செய்து முடிக்கிறார். கிழவர் இந்தக் கண்டத்திலிருந்து பிழைத்து விட்டார். டாக்டரைப் பாராட்டதவர்கள் கிடையாது.

ஆனால் கிழவருக்கு இந்த ஆஸ்பத்திரி கெடுபிடியில் இருக்கக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. உயிர் வாழவே சைமக்குக்கு விருப்பம் இல்லை. அதிகமாக எழுந்து நடமாடுவதற்குக் கூட அந்தப் பேராசிரியருக்கு இருப்புக் கொள்ளவில்லை மெதுவாக நழுவி வராந்தாவுக்கு வந்து நிற்பார். ஜன்னல்களின் வழியே தெரியும் நகரத்தின் அழகை வெகுநேரம் பார்த்துக் கொண்டிருப்பார். கீழேயுள்ள குழந்தைகளின் ஒலி அவரைக் கிளுகிளுக்கச் செய்யும்.

ஆர்வத்துடன் எட்டிப் பார்ப்பார். சில சமயம் காகிதங்களில் விதம் விதமாகப் பறவைகள் மாதிரி செய்து கீழே பறக்க விடுவார்.

தூரத்திலுள்ள ஒரு கட்டிடம் அவர் கவனத்தை ஈர்க்கிறது. அங்கிருந்து தினமும் புறாக்களை பறக்கவிடும் ஒரு சிறுமியை பேராசிரியரின் கண்கள் ஆவலுடன் கூர்ந்து நோக்குகின்றன.

பேராசிரியரின் நினைவு மெல்லக் கிளர்ந்தெழுகிறது. காணாமல்போன தன் மகளின் ஞாபகம் அவரை வாட்டுகிறது. அவளுக்கும் புறாக்கள் என்றால் உயிராயிற்றே.

லாண்டரி கடையின் கூரையின் மீது நின்றவாறே புறாக்களை அவள் பறக்க விடுவதை பார்க்கப் பார்க்க அவள் தன் மகள்தான் என்ற எண்ணம் பேராசிரியருக்கு வலுக்கிறது. எப்படியும் அவளை அருகில் போய்ப் பார்த்துவிட வேண்டும் என்ற துடிப்பு அதிகமாகிறது.

அந்தப் பெண் தன்னுடைய மகள்தானா என்று தெரிந்து கொள்ளத் துறுதுறுக்கிறார். வாழ வேண்டும் என்கிற ஆசையைவிட தான் நினைத்தது சரியா என்று அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலே பேராசிரியரை உந்தித் தள்ளுகிறது. ஆஸ்பத்திரி வார்டுகளிலிருந்து தப்பி தன்னுடைய கடைசிச் செய்கையாக ஓட்டத்தை அந்த நோயாளி துவங்குகிறார்.

# ஜாடி செய்யும் கலைஞர்

(தி ஓல்ட் கிரா·.·ப்ட்ஸ்மன் அ·.·ப் த ஜார்ஸ்)

இது ஒரு தென் கொரிய படம்.

ஜப்பானிய ராணுவத்திலிருந்து விடுதலை பெற்றபின் டாங்க்ஸன் தன்னுடைய சொந்த கிராமத்திற்கு வருகிறான். வரும்வழியில் சூளை ஒன்றைப் பார்க்கிறான். வாழ்நாள் முழுவதும் அழகிய ஜாடிகள் செய்வதிலேயே காலத்தைக் கழித்த தன் தகப்பனாரின் நினைவு டாங்க்ஸனுக்கு எழுகிறது. ஊருக்குள் நுழைந்து வீட்டைக் கண்டுபிடிக்கிறான். ஆனால் அது பாழடைந்து கிடக்கிறது. அப்பாவின் சூளை இப்போது பிச்சைக்காரர்கள் தங்கும் இடமாகக் காட்சியளிக்கிறது. திகைத்துப்போய் நிற்கையில் தன் தகப்பனாருடைய பழைய நண்பராவ வெங்லோனியைச் சந்திக்கிறான். அந்த நண்பரிடமிருந்து தன் பழைய குடும்ப வரலாற்றை அறிகிறான். என்ன கதை அது?

கைகளின் திறமையையும், சுற்றி வாழ்பவர்களின் நம்பிக்கையையும் கொண்ட வயது முதிர்ந்த ஸாங் பனிப் புயலால் தாக்குண்ட அழகிய இளம் பெண் 'ஒக்கூ'வைக் காப்பாற்றுகிறான். பரபரப்புடனும், பரிவுடனும் அவளை வீட்டினுள் தூக்கிச் செல்கிறான். துவண்டு போயிருந்த அவள் உடம்பு முழுவதையும் உரசித் தேய்த்து அவளுக்கு உயிரூட்டுகிறான். ஒக்கூவின் வனப்பு வாய்ந்த உடல் வடிவம் கலைஞனது மனத்தில் பரவசத்தை உண்டு பண்ணுகிறது. தன்னைக் காப்பாற்றிய கிழவனையே அவள் மணந்து கொள்ளவும் விரும்புகிறாள் என்று அறிந்த போது அவன் வியப்பு பன்மடங்கு அதிகமாகிறது.

'ஒக்கூ' ஓர் ஆண் குழந்தைக்குத் தாயாகிறாள். முதிய தகப்பனின் மகிழ்ச்சி வெகுநாள் நீடிக்கவில்லை.

ஒக்கூவை ஏற்கனவே பிரிந்த பழைய காதலனை அவள் மீண்டும் சந்திக்க நேரிடுகிறது, என்னதான் தன்னுடைய கணவனுக்கு உண்மையாக நடந்து கொள்ளவேண்டும் என்று மனத்திலே தோன்றினாலும், ஒக்கூவின் காதல் உணர்ச்சிதான் கடைசியில் வெற்றி பெறுகிறது. காதலர்கள் ரகசியமாகச் சந்தித்துக் கொள்கிறார்கள்.

ஸாங்கிற்கு இந்தக் காதல் விஷயம் அம்பலமாகிறது. அரிவாளைக் கையில் எடுத்துக் கொள்கிறான், காதலனை எப்படியும் தீர்த்துக் கட்டி விடுவது என்ற எண்ணத்துடன். ஆனால் கிளம்பு முன் கள்ளங் கபடமுற்ற முகத்துடன் அமைதியுடன் உறங்கும் தன் குழந்தையைப் பார்த்ததும் அவனுக்கு மனதில் இரக்கம் பிறக்கிறது. ஒக்கூ தன் காதலனுடன் ஓடிவிடுகிறாள். மனமுடைந்து போன கிழவன் தற்கொலை செய்து கொண்டு விடுகிறான்.

இளம் ராணுவ வீரனுக்குத் தன் பெற்றோர் பற்றிய இந்தக் கதையைக் கேட்டதும் கண்களில் நீர் துளிக்கிறது. பாழடைந்த தன் பழைய வீட்டுக்குள் நுழைகிறான். அங்கே அவன் கண்ட காட்சி என்ன? மரணப்படுக்கையில் இருக்கும் அவன் தாய் ஒக்கூவுக்கு மூச்சு வாங்குகிறது. தன் மைந்தனைப் பார்ப்பதற்கென்றே அவள் வாழ்ந்திருக்கிறாள். டாங்ஸனின் மடியில் அவள் உயிர் துறக்கிறாள்.



இதுதான் பரிசு.





## 9. உதயமூர்த்தி தந்த செக்

அந்த மங்கலான வெளிச்சம்; ஒதுப்புறமான அந்த வீட்டில், தன்னையும் உதயமூர்த்தியையும் தவிர வேறு யாருமே இல்லை என்ற உணர்வு; அவன் சாய்ந்து உட்கார்ந்துகொண்டு சிகரெட் புகையைச் சாவதானமாகக் கூரையை நோக்கி ஊதும் வகை— இவற்றால் இனம் தெரியாத ஒருவித பயம் அவள் உள்ளத்தில் ஏற்பட்டாலும் அது வளர்வதற்கு மேனகா இடம் கொடுக்கவில்லை.

புகழ்பெற்ற ஒரு கார் புரோக்கர் கம்பெனிக்கும், ஒரு ஓர்க்ஷாப்புக்கும் உதயமூர்த்தி அதிபர்; பழகின மனிதர்; பத்து நிமிடத்தில் பணத்தை வாங்கிக் கொண்டு திரும்பிவிட வேண்டியது தானே? உள்மனத்தில் தலைகாட்டிய சந்தேகங்களை அகற்றிவிட்டு அவள் தன்னம்பிக்கையோடு உட்கார்ந்தாள். பையிலிருந்து புள்ளி விவரங்கள் அடங்கிய சீட்டை எடுத்து வைத்துக்கொண்டு, "என் கணக்குப்படி ஆயிரத்து நூற்றைம்பது வருகிறது," என்றாள்.

"அப்படியா? வாசியுங்கள்," என்றான்.

அவள், வரிசையாகப் படித்தாள்.

அவன் சிறிது நேரம் பேசாமல் எங்கேயோ பார்த்தபடி உட்கார்ந்திருந்தான்.

சிறிது பொறுத்து அவள் நினைவுபடுத்தினாள். "எனக்கு நேரமாகிறதே." கணக்குச் சம்பந்த ஏதோ தகராறு வரக்கூடும் என்று அவளுக்குத் தோன்றிற்று. "உங்களிடம் கணக்கு இருந்தால் ஒப்பிட்டுப் பார்க்கலாமே?" என்றாள்.

"அதெல்லாம் வேண்டாம்."

செக் புத்தகத்தை எடுத்து வந்து அவள் குறிப்பிட்ட தொகைக்கு எந்தவித ஆட்சேபமும் சொல்லாமல் அவன் செக் எழுதிக் கொடுப்பான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

"தாங்க்ஸ்." நன்றியோடு, வாங்கிக் கொண்டாள்.

பைக்குள் வைப்பதற்காக அவள் செக்கை மடிக்கப் போனபோது தான், தேதி சரியாக இல்லை என்பது அவள் கண்ணில் பட்டது.

அதைக் குறிப்பிட்டு, "கொஞ்சம் திருத்தித் தந்து விடுகிறீர்களா?" என்றாள்.

அவன் மெல்ல நடந்து அவள் உட்கார்ந்திருந்த கூடைநாற்காலிக்குப் பின்னால் வந்தான். ஒட்டினாற்போல் நின்றான்.

அவள் கையில் செக் இருந்தது.

அவன் குனிந்து, "தேதி சரியாகப் போடவில்லையா என்ன? எங்கே பார்க்கலாம்," என்றான்.

சிகரெட் நெடி கலந்த அவன் மூச்சு தனது புறங்கழுத்திலும் காதிலும் மெல்லப்படர்வதை அவள் உணர்ந்தாள்.

என்ன வந்துவிட்டது உதயமூர்த்திக்கு? அவளுக்குப் புரியவில்லை. ஆள்வார்பேட்டை அலுவலகத்தில் இருவரும் தினம் சந்தித்துக் கொள்வார்கள். அப்போதெல்லாம் கண்ணியமாக நடந்துகொள்வானே? இரண்டு முறை, இந்த வீட்டுக்கு அவள் ஏற்கெனவே வந்திருக்கிறாள். அவன் அனாவசியமாக ஒரு நிமிடம் கூட அவளை நிறுத்தி வைத்ததில்லையே. செக்கைப் பிடித்திருந்த அவள் கரம்



இலேசாக நடுங்க ஆரம்பித்தது:

அவன் அத்தோடு விட்டிருந் தானாயின், விபரீதம் ஒன்றும் நேர்ந் திருக்காது.

''ஆமாம். தேதியைத் தப்பா கத்தான் போட்டுவிட்டேன். எங்கே, இப் படிக் கொடுங்கள்,'' என்று சொல்லியபடி, அவள் கேசத்தில் தன் முகம் உரசுகிறாற் போல் குனிந்தவனாய், அவள் வலதுதோள் மீது படுகிறாற்போல் கையை நீட்டினானோ இல்லையோ, ஆணியை மிதித்துவிட்டவள் போல் குபீரென்று எழுந்தாள் மேனகா. எப்போது திரும்பினாளோ, எப்போது கையை ஓங்கினாளோ- பளார் என்று ஒரு சத்தம் கேட்டது. அதே விநாடி தொப் பென்று சோஃபாவில் உட்கார்ந்தான் உதயமூர்த்தி, கன்னத்தைக் கையால் பொத்திக்கொண்டபடி. சிகரெட் எங்கோ போய் விழுந்தது.

சில விநாடிகளுக்கு அந்த அறை யில் வேறு ஓசையே இல்லை. அவளுடைய இதயப் படபடப்பைத் தவிர.

நூறு உதயமூர்த்திகளைக் கொளுத்தக்கூடிய அளவுக்கு அவளுக்குள் சினம் சிறிக் கொண்டிருந்தது. ஆனால் அதை வார்த்தைகளில் வடிக்கமுடியாமல் அவள் திணறிக் கொண்டிருக்கிறாள் என்



முதலாளி:

ஏண்டாப்பா, இவ்வளவு நீளப் பென்சிலைக் காதில் செருகிக் கொண்டால்தான் நீ மற்றவர்களைக் காட்டிலும் அதிக வேலை பண்றேன்று தெரியுமா?

பதை அவளது உதடுகளின் துடிப்பு வெளிப்படுத்திற்று.

''மிஸ்டர் உதயமூர்த்தி! ஒரு பெண்கிட்டே நடந்துகொள்கிற முறையா இது?'' என்று மட்டுமே அவளால் வினவ முடிந்தது.

''நீங்களா! பெண்ணா!'' அவன் சிரித்தான். ''அகராதியைப் பாருங்கள், என்ன அர்த்தம் போட்டிருக்கிறான் என்று.'' அவன், கீழே கிடந்த சிகரெட்டை எடுத்துக் கிண்ணத்தில் போட்டான். ''தன்னந் தனியே மெட் ராசுக்கு வந்து, தன்னந் தனியே லாட்ஜில் தங்கிக் கொண்டு, தெரிந்த வர்கள் தெரியாதவர்கள் என்று வித்தி யாசம் பார்க்காமல் தினம் நூறு பேரு டன் பேசிப் பழகிக்கொண்டு..சே!''

அவன் சிரிப்பு அவளது ஆத் திரத்தைத் தூண்டிவிட்டது.

''உங்கள் அகராதி ரொம்பப் பழசு. அதை மூர்மார்க்கெட்டில் போட்டு விட்டுப் புதிது ஒன்று வாங்குங்கள்!'' என்றாள் அவள், காட்டமாக. ''அடுப் புப் புகையிலே அழிந்த போகிறதற் குத்தான் கண், தொட்டில் ஆட்டுவ தற்குதான் கை, குடும்பத்துக்கு உழைத்து ஓடாய்த் தேய்கிறதற்குத்தான் கால் —இப்படிப் பத்தாம் பசலியாய் யார் விட்டிற்குள் முடங்கிக் கிடக்கிறாளோ அவளைத்தான் நீங்கள் பெண் என்பீர்கள். டிரெஸ்ஸில் இருக்கிற புதுமை உங்கள் மனசுக்கு வரவில்லையே! அதிருக்கட்டும்..'' அவள் திருப்பிக் கேட்டாள். ''நீங்கள் ஒரு ஆண்பிள்ளைதானா? தரவேண்டிய கமிஷ னைப் பிரித்துத் தருகிறேன் என்று வீட்டுக்கு வரச் சொல்லிவிட்டு...வெட் கமாக இல்லை உங்களுக்கு?'

அவன் உடனே பதிலொன் றும் தரவில்லை. வாய்திறந்தபோது அவன் குரலில் ஒரு மாறுதல் இருந்தது.

''மேனகா,'' என்றான் பதற் றப்படாமல். ''என்னை மன்னித்துக் கொள். நான் உன்னைப் பரீட்சை பண் ணிப் பார்த்தேன். அவ்வளவுதான். பணம் பணம் என்று பறக்கிறாயே, அதற்காக எவ்வளவு தூரம் போகிறாய் பார்க்கலாம் என்று தெரிந்து கொள்ளத்தான் இப்படிச் செய்தேன்! பரீட்சையில் தேறிவிட் டாய்! முதல் வகுப்பில் தேறிவிட்டாய்!''

கேலிப் புன்னகையொன்று அவள் முகத்தில் உருவாயிற்று. ''தேம்வர



தில் நெய் வடிகிறதென்றால் கேட்பாருக்குப் புத்தி இல்லையா? உங்கள் கதையை நம்புவதற்கு நான் அவ்வளவு முட்டாள் அல்ல. அது சரி. தெரியாமல்தான் கேட்கிறேன். நீங்கள் யார் எனக்குப் பரீட்சை வைப்பதற்கு?"

"மேனகா, என்னை நம்பு. நான் உன்னை மனமாரக் காதலிக்கிறேன்."

அவன் அவளை நெருங்கவும், அவளுடைய கண்கள் கொவ்வைப் பழம்போல் சிவக்கலாயின.

"ஒரு கன்னத்தில் வாங்கியது போதாதா? இன்னொன்றிலும் வேண்டுமா?" என்று கூவியபடி கையை ஓங்கினாள்.

அவன் திடுக்கிட்டு நிற்கவில்லை. பின் வாங்கவும் இல்லை. நிதானமாக, அமைதியை இழக்காமல், ஓங்கிய அவள் கையை டக்கென்று பற்றினான். பேச்சை நிறுத்தாமல் அவள் கைகளை முறுக்கி அவளது முதுகோடு வைத்துக் கட்டுவதற்கும், கூச்சல் போடுவதற்காகத் திறக்கப்பட்ட அவள் வாய்க்குள் கைக்குட்டையை வைத்து அடைப்பதற்கும் அவனுக்குச் சில வினாடிகளுக்கு மேல் பிடிக்கவில்லை. அவளை அப்படியே தூக்கிக் கொண்டுபோய், நீண்ட சோபாவில் கிடத்தினான்.

பிறகு, சிகரெட் கேஸைத் திறந்தான். சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக்கொண்டான்.

"நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிடுகிறேன். திமிராதே, கைதான் வலிக்கும். ஸ்கௌட் படையில் இருந்தபோது நான் முடிச்சுப் போடுவதில் எக்ஸ்பர்ட். ஞானப் பிரகாசத்துடைய ஓட்டலில் உன்னை முதன் முதலில் பார்த்தேன், பார்.அப்போதே உன்னை எப்படியும் மனைவியாக அடைவது என்று தீர்மானித்துவிட்டேன்."

அவன் சிகரெட்டை எடுத்துச் சாம்பல் கிண்ணத்தில் தட்டினான்.

"பயப்படாதே. உன் சம்மதமில்லாமல் நான் எதுவும் செய்யமாட்டேன். நீ இருக்கும் நிலையைப் பார். நீ நினைக்கிறபடி நான் அயோக்கியனாக இருந்தால் என் இச்சையை நான் இப்போது நிறைவேற்றிக் கொண்டுவிடலாம். ஆனால் நான் அப்படிச் செய்யப் போவதில்லை."

மேனகாவுக்கு அவமானத்தால் உதடு துடித்தது. வாய் திறக்க முடியாமல், செயலற்றுக் கிடக்க நேர்ந்த கேவலத்தை அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அந்தக் கேவலத்துக்குக் காரணமான உதயமூர்த்தியை வெறுப்புடனும், ஆத்திரத்துடனும் பார்த்தாள். அவன் அவள் கோபத்தை லட்சியம் செய்பவனாகத் தெரியவில்லை.

## அமெரிக்கப் பத்திரிகையில் திரு. சுப்பிரமணியம்

சிதம்பர சுப்பிரமணியம்: திருமதி காந்தியின் புதிய 'மூளைப் படை'யின் மிகத் திறமையான அரசியல்வாதி, அனேகமாய் இந்த 59 வயதுக்காராகத்தான் இருக்கும். கொள்கையளவில், சுப்பிரமணியம் நிச்சயமாக மத்திக்குச் சற்று இடப்புறம் சாய்ந்திருப்பவர் தான். ஆனால் வேறு சில சகாக்களைப் போல இவர் கம்யூனிஸ்டுகளுடன் ஒருபோதும் குலாவியவர் அல்ல;

ஸிண்டிகேட்டுடன் நடைபெற்ற போராட்டத்தில் திருமதி காந்திக்கு உறுதியான, தொடர்ந்த ஆதரவு கொடுத்தார். அது, பிரதம மந்திரியின் கருத்தில் கணிசமான உயர்வைக் கொடுத்திருக்கிறது. தலை நரைத்துக் கொண்டிருக்கும், கண்ணாடியணிந்த இந்தச் சென்னை வழக்கறிஞர், திருமதி காந்தியின் புதிய அரசியல் யந்திரத்தை உறுதிப்படுத்தும் பொறுப்பேற்றிருக்கிறார். வருங் காலத்தில் இவர் பிரதம மந்திரிப் பதவிக்கே போட்டியிடக்கூடும் என்றுகூடச் சிலர் கூறுகிறார்கள்.

—நியூஸ்வீக்

பக்கத்தில் உட்கார்ந்து பேச லானான்.

''உன்னை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். உனக்காக நான் ஏங்கித் தவிக்கிறேன். அந்த ஏக்கம் எப்படிப்பட்டது என்று சொல்கிறேன். உனக்கு எப்படிச் சொன்னால் விளங்குமோ அப்படி விளக்குகிறேன். நீ பணத்துக்காக எப்படித் துடிக்கிறாயோ, அந்த மாதிரி நான் உனக்காகத் துடிக்கிறேன். புரிந்ததா?''

மேனகா அவனைக் கனல் உமிழப் பார்த்தாள். அவன் தொடர்ந்தான்.

''இதுவரைக்கும் நீ பிஸினஸ் கூட்டாளி. இனி வாழ்க்கைக் கூட்டாளி ஆக்கிக்கொள்ளவேண்டும் என்று ஆசைப்படுகிறேன். காதல் என்ற மூலதனத்தை வைத்து மணவாழ்க்கை என்ற பிஸினஸை நாம் ஆரம்பிக்கலாம். ஒழுங்காக பிஸினஸ் செய்தால், குடும்பத் தொல்லை என்ற வருமான வரியும், குழந்தைத் தொல்லை என்ற விற்பனை வரியும் போக இன்பம் என்ற லாபம் கணிசமாகக் கிடைக்கும்.அதை இரண்டுபேரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. என்னைப் பற்றிச் சொல்லி விடுகிறேன். நான் மெட்ராஸ் மேக். உற்பத்தித் தேதி: 1939. ஒரே ஓனர். நல்ல கண்டிஷன். பார்த்துக்கொள். யோசித்துப் பதில் சொல்லலாம். இப்போது சொல்ல வேண்டியதில்லை. மெள்ள நிதானமாகச் சொல். ஆனால் ஒன்று நிச்சயம். நான் சொன்னதெல்லாம் சத்தியம். சத்தியம் தவிர வேறில்லை.''

அவன் அவள் கட்டுக்களை அவிழ்த்துவிட்டான். அவள் எழுந்து நின்றாள். வாயிலிருந்த கைக்குட்டையை அவளாகவே பறித்தெறிந்துவிட்டு, மடமட வென்று என்னென்னவோ பேசினாள்.

''தலை கலைந்திருக்கிறது. கண்ணாடியில் போய் வாரிக்கொள்,'' என்றான் அவன் சாவதானமாக.

''பிறகு, ''இனி பிஸினஸ். மிஸஸ் கார்த்திகேயினி ரங்கநாயகம் என்று இருக்கிறார்கள் அடையாற்றில். அவர்களுக்கு ஃபாரின் கார் ஒன்று வேண்டுமாம். ஊத்துமலை வண்டி இருக்கிறதல்லவா? அதைக் காட்டிவிட்டு வா,'' என்றான்.

வெய்யில் வேளையில் வெறிச்சிட்டுக் காணும் வெள்ளை மணற் பரப்பையும் பச்சைக் கடலையும் ஜன்னல்வழியே பார்த்தபடி, சரவணமுத்துவின் கடிதம் பற்றிய யோசனையில் ஆழ்ந்திருந்தான் தேவன்.

''சாப்பிட வரச் சொன்னாங்க.'' பணியாளன் அறிவிப்பு அவனை உலுக்கி விட்டது.

''உம். என்ன?'' என்று திரும்பியவன், முழு உணர்வும் வரப்பெற்றவனாக, ''இதோ,'' என்று சொல்லிவிட்டுச் சுறுசுறுப்பாக எழுந்தான். தலை, உடை, எல்லாம் சரியாக இருக்கிறதா என்று போகிறபோக்கில் கண்ணாடியில் ஒருமுறை சரிபார்த்துவிட்டு புறப்பட்டான்.

ஆனால் மனமென்னவோ காற்சட்டைப்பையில் செருகப்பட்டிருந்த கடிதத்தில்தான் இருந்தது. காலையில் அதைப் பெற்றுக்கொண்டபோது, சரவணமுத்துவா இவ்வளவு நேர்த்தியான கையெழுத்தில் சீராக எழுதியிருக்கிறார் என்ற வியப்புத்தான் முதலில் ஏற்பட்டது. அந்த வியப்பைப் பல மடங்கு ஆக்கிவிட்டது கிழவர் விவரித்திருந்த சரித்திரம்.

சுவீகார சமாசாரத்தைப்பற்றி மகிழ்ச்சி தெரிவித்து விட்டு ஆசிகூறியவர், ''ஒரு காலத்தில் ஓகோ என்று வாழ்ந்திருந்ததுதானே உங்கள் குடும்பம்? சக்கரம் திரும்பி, மறுபடி உனக்கு அந்த வாழ்வு கிடைத்திருக்கிறது!'' என்று குறிப்பிட்டிருந்தார். அவனுக்குத் திகைப்பாக இருந்தது. ஓகோ என்று வாழ்ந்த குடும்பமா! வத்தலகுண்டு பஸ்ஸ்டாண்டில் கடை வைத்திருக்கும் கண்ணப்பரின் குடும்பமா! என்ன சொல்கிறார் இந்த சரவணமுத்து? மிடறு விழுங்கிவிட்டு அவன் பரபரப்புடன் படித்தான். அவனுடைய தாத்தா, மகப் பெரிய செல்வந்தராம். தெற்குப் பகுதிகளில் அவரளவு பணக்காரரை விரல்விட்டு எண்ணிவிடலாமாம். ''கொடுக்கல், வாங்கலில் பெரிய புள்ளி. லட்சக் கணக்கில் பணம் புரளுமாம். திடீரென்று என்ன நேர்ந்ததோ, என்னவோ, எனக்கு சரியாகத் தெரியாது. எல்லாம் நொடித்துப் போய் விட்டது. குடும்பம் சின்னாபின்னமாகிச் சிதறி, எங்கெங்கோ போய் விட்டது. கண்ணப்பர் வத்தலகுண்டுக்கு வந்து குடியேறினார். அப்போது உன் பெரிய அக்கா கைக்குழந்தையாக இருந்தாள் என்று ஞாபகம்.''

என்ன இதெல்லாம்! தேவனுக்கு ஒன்றையுமே நம்பமுடியவில்லை. இது அவனுக்கு வந்த கடிதம்தானா? கடிதத்தைத் திருப்பித்திருப்பிப் பார்த்தான். எழுதியவர், சரவணமுத்துத்தான். தேவனுக்குத்தான் எழுதியிருந்தார். அவன் சுட்டுவிரலால் நெற்றியைத் தேய்த்து விட்டுக்கொண்டான்.

இதெல்லாம் உண்மையாக இருந்தால் அப்பாவும் அம்மாவும் ஏற்கனவே சொல்லியிருப்பார்களே?

எழக்கூடிய சந்தேகத்தை ஊகித்தவர்போல அடுத்த வாக்கியத்திலேயே விளக்கம் தந்திருந்தார் சரவணமுத்து. "உன் அப்பா இருக்கிறாரே, அவர் ஒரு ரோஷக்காரர். மறைந்து போன பழைய பெருமையை நம்பிக்கொண்டு வெறும் பெருங்காய டப்பாவாகக் காலம்தள்ள அவருக்குச் சம்மதமாக இல்லை. நடந்ததை எல்லாம் ஒரு மிக்க மறந்து, நிலைமைக்கு ஏற்றபடி புதிதாக வாழ்க்கை வாழ ஆரம்பித்து விட்டார். யாரும் குழந்தைகளிடம் பாட்டன் வீட்டுப் புகழ் பாடக் கூடாது என்பது அவர் எண்ணம். அதனால் கெடுதல் நேரலாமே தவிர, நல்லது விளையாது என்று அவர் நினைத்தார். உங்கள் அம்மாவுக்கும், பாட்டிக்கும், கடந்து போன சமாசாரங்கள்பற்றி மூச்சுக்கூட விடக்கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லியிருந்தார். ஆனால் இன்றைக்கு உனக்குச் சொல்வதில் தப்பில்லை என்று நினைத்து எழுதினேன். தெரிந்ததாக அவரிடம் காட்டிக்கொள்ளாதே."

கடையில் சர்பத் கலந்து கொடுக்கும் தந்தையையும், ஆட்டுரலில் மாவரைக்கும் தாயையும் தேவன் நினைத்துக் கொண்டான். அவன் கண்கள் கலங்கின.

டைனிங் ஹாலில் அவனுக்காகக் காத்திருந்தாள் வேணியம்மாள். "கமலி ஃபோன் பண்ணினாள். சாப்பிட்டு விட்டு அப்புறம் பேசலாம். வா, உட்கார்."

இரவு கிளப்பிலிருந்து திரும்பி வந்த கமலியின் தந்தை, மகளது அறையிலிருந்து ஆண் குரல் வருவதைக் கேட்டு அப்படியே நின்றார்.

அவரது முகத்தில் கலவரக் குறிகள் எழுந்தன. நெற்றியில் சுருக்கங்கள் விழ, சுற்றுமுற்றும் பார்த்தார். 'எங்கே போய்விட்டாள் சாரதா?' என்ற கேள்வி அதில் தொக்கியிருந்தது. சாரதா அவர் மனைவி.

டிரைவரிடம், "காலையில் ஒரு கல்யாணத்துக்குப் போக வேண்டும். கரெக்டாக ஆறரைக்கெல்லாம் வந்து விடு," என்று கட்டளையிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள் சாரதா. அவளை ஜாடை காட்டி ஈஸ்வர் அழைத்த விதம் அவளுக்குப் புதிராக இருந்தது. ஏன் இவ்வளவு கடுகடுப்போடு இருக்கிறார்? அவளுக்குக் காரணம் விளங்கவில்லை.

அவள் நெருங்கி வந்ததும், முகத்தைக் கமலியின் அறைப் பக்கம் அசைத்துவிட்டு, "கவனி," என்றார்.

காது கொடுத்துக் கேட்ட சாரதாவின் முகம் கணத்தில் வெளிறிப் போயிற்று. பிறகு கோபத்தால் குப்பென்று சிவந்தது. "கமலி!" என்று உரக்கக் கூப்பிட்டவாறு அவள் சடாரென்று கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். பின்னாலேயே ஈஸ்வரும் சென்றார். கட்டில்மீது ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டிருந்த கமலி திடுக்கிட்டு எழுந்தாள். பெற்றோரை அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அதை அவள் கண்கள் காட்டிக் கொடுத்தன. சட்டென்று தாவிச் சென்று விசையைத் திருப்பி டேப் ரிகார்டரை நிறுத்தினாள்.

ஈஸ்வரும் சாரதாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். 'ஒன்றுமில்லாததைப் போய்ப் பெரிது பண்ணிவிட்டோமே,' என்ற உறுத்தலால் அசடும், 'நல்ல வேளை, நாம் சந்தேகப் பட்டது போல் அறையில் யாருமில்லை,' என்ற நிம்மதியால் மகிழ்ச்சியும் அவர்கள் முகத்தில் ஏக காலத்தில் பெருகின.

"சாயங்காலப் பேப்பரைக் காணோமே. கமலி, நீ எடுத்து வந்தாயா?" என்று ஒப்புக்குக் கேட்டுவிட்டு, "இல்லையே அப்பா," என்று அவள் சொன்னதும், "என் ரூமில் இருக்கும் போலிருக்கிறது," என்று சொல்லிவிட்டு ஒரு வகையாகச் சமாளித்துக்கொண்டு அவர் பின்வாங்கி விட்டார்.

தாய்க்கு மகள்மீது பாசம் பெருக்கெடுத்தது.

"பால் வேண்டாம் என்று சொன்னாயாமே, ஏம்மா? பசியில்லையா? சாப்பாட்டை வேண்டுமானாலும் நிறுத்தி

விடு. பாலே நிறுத்தாதே,'' என்று கமலி யின் நெற்றியில் விழுந்த கேசத்தை ஒதுக்கிவிட்டுக் கொஞ்சிய சாரதா, கண வரிடம் திரும்பிவந்து, ''தேவனோடு ஃபோனில் பேசுகிறாள் இல்லையா? அதை யெல்லாம் ஆசையாக ரிகார்ட் பண்ணி வைத்துக் கொண்டு பொழுது போகாத போது போட்டுக் கேட்கிறாள்,வேறொன்று மில்லை,'' என்றாள்.

''கேட்கட்டும், கேட்கட்டும்,'' என்றார் ஈஸ்வர், திருப்தியோடு.

''அதிருக்கட்டும். பையன் எப் படி இருக்கிறான்? மெனக்கெட்டுக் கமலி அழைத்துவந்திருக்கிறாள், அந்தச் சமயம் பார்த்து நான் வெளியே போய்விட் டேன்.'' எதிர் சோஃபாவில் உட்கார்ந்து கொண்டு அவள் ஆவலோடு விசாரித் தாள்.

அவருக்கு அவளைப் பரிகாசம் செய்ய வேண்டும்போல் இருந்திருக்கும் போலும்.

''பையனுக்கென்ன? குள்ள மாக, கறுப்பாக, குண்டாக இருக்கிறான். பல் கொஞ்சம் வெளியே நீட்டிக் கொண் டிருக்கிறது. ஒன்றரைக் கண்ணாகவும் இருக்கும் போலிருக்கிறது. மற்றப்படி ரொம்ப அழகாக இருக்கிறான்.''

அவள் புன்னகை செய்து கொண்டாள். ''நீங்கள் நாடு நகரமெல் லாம் சல்லடை போட்டுச் சலித்துக் கடைசியில் வடிகட்டிப் பொறுக்கியெடுத்த மாப்பிள்ளை ஆயிற்றே, அவன் எப்படி யிருப்பான் என்று கேட்க வேண்டுமா? ஆனாலும் ஒரு குறை எனக்கு.''

கால்களைத் தூக்கி மோடாமீது போட்டபடி, ''என்ன?'' என்றார் அவர்.

''பட்டிக்காட்டில் வளர்ந்த ஏழைப் பிள்ளை. நம் தரத்துக்கும் அந்தஸ்துக்கும் ஒத்துவருமா? யோசிக் கிறேன்.''

''முதலில் சுவீகாரமும், கல் யாணமும் நடக்கட்டும்,'' என்றார் அவர். ''தரமும் அந்தஸ்தும் தானே வருகிறதா இல்லையா, பார்.''

''உங்களுக்குத் தெரியுமோ? அந்த ராங்கிக்காரி கார்த்திகேயினி இருக் கிறாளே, அவள் வரைந்த படத்தைக் கமலி யும் தேவனும் பார்த்து ஏதோ வேடிக்கை யாகப் பேசிக் கொண்டிருந்தார்களாம். திடீரென்று அவள் வந்துவிட்டாளாம்..''

கார்த்திகேயினியின் பெயரைக் கேட்டதும் அவர் முகத்திலிருந்த மகிழ்ச்சி மறைந்தது.

''கிடக்கிறாள், நன்றி கெட்ட நாய்,'' என்றார் அலட்சியமாக. ''நேரமாகி விட்டது. படுத்துக் கொள்ள லாம்.''

தூங்குமுன் சாரதா கடைசி யாகக் கேட்ட கேள்வி, ''சுவீகாரத்துக்கு எப்போது தேதி வைத்துக் கொண்டிருக் கிறீர்கள்?''

''நாளைக்கு முடிவாகும்,'' என் றார் அவர்.

மறுநாள் அவர் தமக்கை வீட் டுக்குச் சென்றபோது, ''சரியான சம யத்துக்கு வந்தாய். வா!'' என்று வரவேற்றார் ரங்கநாயகம்.

அவர் பக்கத்தில் கார்த்தி கேயினி நின்றிருந்தாள்.

''வாருங்கள்,'' என்று அவளும் புன்னகையோடு வரவேற்றாள்.

அந்தப் புன்னகை ஈஸ்வருக் குப் பிடிக்கவில்லை. அவள், ''வாருங் கள்,'' என்று சொன்ன விதமும் பிடிக்கவில்லை.

(தொடரும்)



அட்டையில்
குமாரி ராஜசந்திரா
வண்ணப்படம்:
ஆர். நரசிம்மன்

# எழுந்தே வருக!

தங்கள் பெயரிலேயே ஜெயத்தை யுடைய நால்வரின் புத்தாண்டு சிந்தனைகள்.



திரு. ஜெயப்பிரகாஷ் நாராயண்

மனிதன் சாப்பிட மட்டும் வாழவில்லையென்பதைத் தயவு செய்து மனத்திற் கொள்ளுங்கள். ஆனால், அதை விட அழகான, ஆழமான தீர்க்கப்பட வேண்டிய பசிகளும் மனிதனுக்கு இருக்கின்றன. ஆகையால், உங்களது அக வாழ்வையும் புறவாழ்வையும் இணைக்க முயலுங்கள். அதனால் உங்கள் வாழ்க்கை உங்களுக்கு மட்டுமல்லாமல் நீங்கள் வாழும் சமுதாயத்திற்கும் அர்த்தமுள்ளதாகவும், முழுமையானதாகவும் இருக்கும். உங்களது வாழ்க்கை ஓட்டத்தில் கடுமையான சிக்கல்களை நீங்கள் எதிர் கொள்ள வேண்டியதிருக்கும். முரண்பட்ட நோக்கங்களுக்கிடையில் நீங்கள் அகப்பட்டுக் கொள்ளலாம். சோதனையும், எதிர்பார்க்கும் ஏக்கங்களும் மிகுந்த இந்த காலத்தில் அறிவுரைகளைத் தேடி நீங்கள் அதிகம் அலைய வேண்டாம். உங்கள் ஒவ்வொருவருக்குள்ளும் நிலைத்து நிற்கின்ற ஒரு சின்னஞ்சிறு குரல் உண்டு. உங்களை உள்ளடக்குங்கள். அமைதியாயிருந்து கவனமாக அந்தக் குரலைக் கேளுங்கள். வேறு யாரும் உங்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக இருக்க முடியாது.

—திரு. ஜெயப்பிரகாஷின் பிரசங்கத்திலிருந்து.

அடிமைப் பெண்ணில் நான் பின்னணி பாடினாலும் பாடினேன் ரசிகர்கள் தினமும் எனக்கு ஒரே விஷயத்தைப் பற்றிக் கடிதம் எழுதுகின்றனர். "நீங்கள் பானுமதியைப் போல நடிக்கவும், பாடவும் கற்று, திரையுலகில் நிரந்தரமாகச் சுடர்விட்டுப் பிரகாசிக்க வேண்டும்," என்பது அவர்களது அன்புக் கட்டளை! அதனால் கடந்த நான்கு மாத காலமாக முறைப்படி சங்கீதம் பயில ஆரம்பித்திருக்கிறேன். புத்தாண்டில் நிறையப் பக்திப் பாடல்களை ரிகார்டிங் கொடுக்க விரும்புகிறேன்.

கான்வெண்டில் படித்து முடித்ததால் எனக்குத் தமிழைவிட ஆங்கிலம்



குமாரி ஜெயலலிதா

தான் சரளமாகப் பேச வருகிறது. வெளி நாட்டினர் தமிழைப்பற்றி ஆராய்ச்சி செய்து கற்க விரும்பும்போது, தமிழ் நடிகையான நான் அதன் இனிமையை ரசிக்க முடியாமலிருக்கிறதே என்பது எனது குறை. அதனால் ஓய்வு நேரங்களில் தமிழ் நூல்களை— குறிப்பாகத் திருக்குறளை மனப்பாடம் செய்ய ஆரம்பித்திருக்

கிறேன். எந்த ஒரு விஷயத்திற்கும் குறளி லிருந்து மேற்கோள் காட்டுமளவிற்கு நான் 'எக்ஸ்பர்ட்' ஆக வேண்டுமென்பது புத்தாண்டுத் திட்டங்களுள் ஒன்று.

கடைசியாக—

உலகம் முழுவதையும் சுற்றிப் பார்க்க வேண்டுமென்பது எனது நெடு நாளைய ஆசை. அதில் ஒரு பகுதியாக இந்த ஆண்டு நான் சில வெளிநாடு களுக்குப் போக வாய்ப்புக்கள் இருக் கின்றன.

புத்தாண்டில் எனது ஆசை களும் திட்டங்களும் நிறைவேற ஆண்ட வன் நிச்சயம் குறுக்கே நிற்கமாட்டார் என நம்புகிறேன்.

பேட்டி: ரமேஷ்



திரு. ஜெயகாந்தன்

புத்தாண்டுகள் எல்லாமே நம்பிக்கை தருவன. அடுத்த புத்தாண்டு வருகிற வரை இந்த ஆண்டைத்தான் நாம் நம்பி வாழ்தல் வேண்டும்.

இந்த ஆண்டில் எனக்கு வயது முப்பத்தாறு ஆகும். வழக்கம்போல் பல சிறுகதைகளும் ஓரிரு நாவல்களும் நிச்சயம் எழுதுவேன்.

ஒரு படம் தயாரிக்கத் திட்டம் உண்டு. அது வழக்கத்தில் மாறிய, வேறு திசையில் வழி காட்டக்கூடிய படைப்பாக அமையும். எனது முந்தைய படைப்புக் களிலிருந்தும் கூட அது மாறுபட்டிருக்கும்.

அதனை ஒரு 'ஷார்ட் ஃபிலிமா' கத் தயாரிக்கத்தான் என்னிடம் வசதி உண்டு. இதுவும் ஒரு புத்தாண்டு நம் பிக்கை.

இம்மாதிரியான நம் பிக்கைதான் எல்லா மனிதரையும் வாழ வைக்கிறது.

நம்பிக்கைகள் நிறைவேறுவதும் நிலைமாறுவதும் இரண்டாம் பட்சமான விஷயங்கள்.

நம்பிக்கைதான் வாழ்க்கைக்கு. அடிப்படை-அடித்தளம்!

எவ்வளவுதான் சிறப்பானதா யிருந்தபோதிலும் 1969 — என்பது இறந்த காலம்தான்.

எவ்வளவுதான் குழப்ப மானதாய் இருந்தாலும் 1970-தான் எதிர்காலமும்-நாம் எதிர்கொள்ள வேண் டிய காலமுமாகும்.

எனவே புதிய நம்பிக்கைகளுடன் இதனை நாம் எதிர்கொள்வோம்.

ஒவ்வொரு நாளின் உதயமும் எனக்கொரு நம்பிக்கையின் எழுச்சி யாகவே மலர்கிறது.

என் வீட்டு வாசலில் எப் போதும் ஒரு ரோஜா மலர்ந்திருக் கிறது. வந்து பாருங்கள்!

எல்லா வீடுகளின் முன்னாலும் எப்போதும் ஓர் இனிமை மலர்ந்திருக் கிறது. ஆழ்ந்து கவனியுங்கள்!

நேற்றுவரை விடிவே இல்லையா என்று ரகசியமாகவும், கண்ணாடியின் முன்னாலும் தனிமையிலே பெருமூச் செறிந்த ஒரு கன்னிப் பெண்ணுக்காக இன்று கெட்டி மேளம் முழங்குகிறது. இந்த நல்ல செய்தியை-இப்போது தனி மையில் பெருமூச்செறிந்து நிற்கிற கன்னிப்பெண்ணுக்குச் சொல்லுவதைவிட நல்ல பணி உங்களுக்கு வேறு என்ன இருக்கிறது?

இதைத்தான் நான் செய் கிறேன்.

அதோ அந்தக் கூரையின் மீது ஏறிநின்று என்ன இறுமாப்புடன் இந்த உலகத்தைப் பார்த்து அந்தச் செந்நிறக் கொண்டைக் கோழி நம்பிக்கையோடு கொக்கரிக்கிறது!

சில நண்பர்களின் பார்வை மட்டும் குனிந்தே போயிருக்கிறதே!

பீத்தோவனின் 'எரைகோ' வைக் கேளுங்கள்! கொண்டை சிலிர்த்துக் கொக்கரிக்கும் சேவலாய் சிறகடித்துக் கூவ வெறிகொண்டு திமிறி எழுவீர்கள்!

'ஓடெட்டா' என்றொரு நீக் ரோ மாது சொல்லுகிறாள்!

''ஏய்! நீ உன்னையே பார்.
நீ சர்வவல்லமை வாய்ந்தவன்.

நீ சர்வவல்லமை பொருந்திய உலகத்தின்
ஓர் அங்கம்-எனவே நீ சர்வ

வல்லமை வாய்ந்த ஆத்மா!''

தன்னையும் உலகையும் காலத்தையும் நம்புவதைத் தவிர இந்த வாழ்க்கையில் பயனுள்ள அர்த்தமுள்ள காரியம் வேறில்லை.

பகைமையும், வெறுப்பும், வஞ்சனையும், ஏமாற்றும் - ரொம்பவும் பழைய நைந்துபோன பிசாசுகள்.

நம்பிக்கை ஒன்றுதான் எப்போதும் புதிதாய் ஒளிமிக்கதாய் மகிழ்ச்சி தருவதாய் உள்ள ஒரே ஆயுதம்; ஒரே மருந்து, ஒரே மந்திரம்.

என்றும் புதிதாய் இருந்தோம் இனியும்
இன்றும் புதிதாய்ப் பிறந்தோம்
நம்பிக்கை தருகின்ற நல்லாண்டுக்கு
நல்வருகை கூறுவோம்!



திரு, லால்குடி ஜெயராமன்

முன்பு கலை அறுபத்து நான்கு என்று சொல்லுவார்கள். இப்போது கலைகள் கோடிக்கணக்கில் பெருகிவிட்டன. இறைவன் ஒவ்வொருவரிடமும் பயனுள்ள காரியங்களைச் செய்து பிறரை மகிழ்விக்க ஒரு 'பொறி' வைத்திருக்கிறாரே, அதை உணர்ந்து செயல்பட்டாலே போதுமல்லவா?

# பேர்ரடிக்காத சில பொன்மொழிகள்!

உலகத்திலேயே மிக அழகான எட்டு வார்த்தைகள்: 'அன்புடையீர், கடந்த ஆண்டின் வருமான வரியில் ரிஃபண்ட் இத்துடன் அனுப்பியுள்ளோம்.'

—பாப்ஹோப்

அவசரப்படுகிற சோஷலிஸ்ட்தான் கம்யூனிஸ்ட்.

—சி. இ. வில்ஸன்

உங்களை நடத்த வேண்டிய விதத்தில் உங்கள் மனைவி நடத்தவில்லை என்றால், அதற்காக நன்றி செலுத்துங்கள்.

—ஹெறபர்ட் வி. ப்ரோச்நோவ்

மோசமான கையெழுத்தினால் ஓர் ஆதாயம் இருக்கிறது. எத்தனையோ எழுத்துப் பிழைகளை அது மறைத்து விடும்.

சாலைகளில் தண்ணீரில்லாதவரை காரோட்டிக்குப் பாதுகாப்பு; காரோட்டி தண்ணீர் போடாதவரை சாலைகளுக்குப் பாதுகாப்பு.

—டிரிப்யூன், மோபிரிஜ்

முட்டாள்களோடு விவாதிப்பது புத்திசாலித்தனமல்ல— பார்க்கிறவர்களுக்கு இருவரில் யார் முட்டாள் என்பது தெரியாது.

—பால்டீவின்





# மறுப்புக்கு மறு

## மறுமறுப்பு

பண்ருட்டி நகரமன்றத் தலைவர் கூறியுள்ள பல செய்திகள் உண்மைக்குப் புறம்பானவை.

### உண்மை என்ன?

4—6—69 கூட்டத்தில் பஸ் நிலையம் திறக்க முதலமைச்சரை அழைப்பதென முடிவெடுக்கப்பட்டது. 2—11—69 கடலூர் வந்திருந்த முதல்வரிடம் தேதி தருமாறு கேட்டபோது, உள்ளூர் நிலைமை புரிந்த அவர் திருச்சிக் கருத்தரங்கு முடிவுக்கேற்ப, தொகுதி சம்பந்தப்பட்ட அனைவரையும் விழாவுக்கு அழைத்தால்தான் வரமுடியும் என்றார்.

### பின்னர் நடந்தவை

10—11—69'ல் உறுப்பினர்கள் கையெழுத்திட்டு, சீக்கிரம் பஸ்நிலையம் திறக்க முடிவெடுப்பதற்காக ஒரு கூட்டம் நடத்தக் கோரினர். 10 நாள் அவகாசம் சட்டப்படி தராமலும், 4—6—69 தீர்மானத்தைச் சட்டப்படி ரத்து செய்யாமலும் மறுநாளே அவசரக் கூட்டம் நடத்தி, அதில் 20—11'69ல் கிடைக்கக்கூடிய யாராவது ஓர் அமைச்சரைக் கொண்டு திறப்புவிழா நிகழ்த்தத் தீர்மானித்தனர். அந்தத் தேதியில் எந்த அமைச்சரும் வராததாலும், திருச்சிக் கருத்தரங்கு முடிவுகள் நிறைவேற்றப்படாததாலும் 21—11—69—ல் 14 உறுப்பினர்கள் கையெழுத்திட்டு 4—6—69 தீர்மானத்தையே நிறைவேற்றுமாறு கேட்டனர். இதைப்பற்றி விவாதிக்கச் சட்டப்படி 2—12—69 அன்று கூட்டம் (10 நாள் தவணையில்) ஏற்பாடு செய்யவும் கேட்கப்பட்டது.

### அவசரக் கூட்டம்

இடையில் 24—11—69 அன்று ஓர் அவசரக் கூட்டத்தை நடத்த முன்வந்தார் தலைவர். 28—11—69 அன்று வருகை தரும் நாவலரைக் கொண்டு திறப்புவிழா நடத்தலாம் என்றார். 4—6—69 தீர்மானப்படி கலைஞரையே அழைக்க வேண்டுமெனத் திருத்தம் தரப்பட்டது. சட்டப்படி திருத்தத் தீர்மானத்துக்கு வாக்கெடுப்பு நடத்திய பின்னரே பிரதான தீர்மானத்தை முடிவு செய்திருக்கவேண்டும்.

### சட்ட மீறல்கள்

இந்தக் கூட்டத்திலும் சட்டத்தை மீறிப் பிரதான தீர்மானத்தை ஆய்வுக்குக் கொணர்ந்தார் தலைவர். வாக்கெடுப்பில் நாவலர் என்று 9 பேரும், கலைஞர் என்று 10 பேரும் வாக்களித்தனர். தலைவர் இறங்கி வந்து நாவலர் என்று வாக்களித்ததால் 10—10 என்று ஆயிற்று. பிறகு தலைவர் ஆசனத்தில் அமர்ந்து சிறப்பு வாக்கினையும் அளித்து நாவலர் என்ற தீர்மானத்தை வெற்றியடையச் செய்தார்.

### வாக்கைக் கெடுத்தார்

கட்டுரையிலுள்ள அச்சுப் பிழையின்படி தலைவர் தன் 'வாக்கைக் கெடுத்தார்!' கழகத்தின் செல்வாக்கைக் கெடுத்தார்! நகர மன்றத் தீர்மானத்தின் நல் வாக்கைக் கெடுத்தார்!

நகராட்சி உறுப்பினர்களான,

சீத்தாராமன், கிருஷ்ணன், சக்ரபாணி, கண்ணன்.

# அந்த இடம், அது, அவள்?

**பனிக் காலம்**

''பனிக்காலம் கொடிது,'' என்றார் மன்னர்.

''பனிக்காலம் நன்று,'' என்றார் புலவர்.

மன்னர் திகைத்தார்.

புலவர் விளக்கம் சொன்னார்: ''ஆம் மன்னா! பனிக்கு ஆலம் நன்று. ஆலம் என்பது நஞ்சு அல்லவா? நஞ்சைக் காட்டிலும் பனி கொடியது தானே?''

இரண்டாம் தேதி காலை.

மேசை மீது வைத்த காப்பி ஆறிக் கொண்டிருந்தது.

வைத்திநாதன் வரவு செலவுக் கணக்கைப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார். மேலிருந்து கீழாகவோ கீழிருந்து மேலாகவோ எப்படிக் கூட்டினா லும் வரவை விடச் சிறிதாக செலவைச் சுருக்கப் பள்ளி ஆசிரியரான அவராலேயே முடியவில்லை. நாற்பது, ஐம்பது ரூபாய் துண்டு விழுந்தது. இன்னமும் ஈடு வைக்க என்ன நகை மிதி இருக்கிறது? கைமாற்று வாங்க. யார் பாக்கியிருக்கிறார்கள்?

''காப்பியைக் குடிச்சிட்டு யோசியுங்களேன்,'' என்றாள் செல்லம்.

''காப்பி குடிக்காத போனால் என்ன நஷ்டம்? நாளேலேருந்து காப்பியை நிறுத்திடு.''

சற்று நேரம் பேசாமலிருந்த வைத்திநாதன் பிறகு, ''இந்த மாசம் கமலா எவ்வளவு கொடுத்தாள்?'' என்று கேட்டார்.

''முழுசாகக் கொடுத்து விட்டாளே குழந்தை. அதோ, நாற்று நாற்பது வரவு வச்சுக் கூட்டியிருக்கிறேன,'' என்று விளக்கினாள் செல்லம்.

''அப்படியே, கொடுத்திருக்கிறளே, அவள் செலவுக்கு ஒண்ணும் வேணுமா?''

''வேணும்போது கேட்டுப்பாள்.''

''கேட்பா. கொடுக்கத்தான் உன் கிட்ட காசு இருக்காது. அப்ப ...சரி, ராஜாராமனுக்கு இன்னிக்கே பணி யார்டர் பண்ணிடலாம். அப்படியே சேட்டுக் கிட்டேயும் ... கொடுத்துடறேன். சட்டைப் பையில் ரூபா எடுத்து வை.''

வைத்திநாதன் எழுந்துவிட்டார்.

''காப்பி...'' என்று செல்லம் நினைவூட்டியதற்கு, ''அந்தப் பழக்கத்தை விட்டுவிட்டேன்!'' என்றார் பளிச்சென்று.

கண்டிப்புக்கார வைத்திநாதன் சொன்னால் சொன்னதுதான்.

மூன்றாம் தேதி காலை.

வைத்திநாதன் அவசரம் அவசரமாகப் பள்ளிக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தார்.

''செல்லம், என் சட்டைப் பொத்தானைக் காணேமே, எங்கே?''

அடுக்களையில் பையன்களுக்குப் பரிமாறிக் கொண்டிருந்த செல்லத்தின் குரல் மட்டும் வந்தது.

''ஸ்டான்டிலே டைம்பீசுக்குப் பக்கத்திலே பாருங்கள்.''

அவர் பித்தானைக் கண்டு பிடித்து மாட்டிக் கொண்டிருந்தபோது கமகமவென்று ரோஜாவின் இனிய நறுமணம் காற்றில் மிதந்து வந்தது. என்ன அது? ஏதோ ஒன்று. எதுவானால் என்ன? அதைக் கவனிக்க யாருக்கு அவகாசம்?

வைத்திநாதன் புறப்பட்டார்.

கூடத்தில் மகள் கமலா நின்று கொண்டிருந்தாள். வாசனை அங்கிருந்து தான் பரவிக் கொண்டிருந்தது.

''என்ன பவுடரம்மா அது? வாசனை தூக்கியடிக்கிறது!''

''புதுப் பவுடரப்பா, வாசனை நன்றாகத்தான் இருக்கிறது.''

அழகாபுரி அழகப்பன்

### ஆ! என்னே பொருத்தம்!

மராத்தி மொழியில் திரு மணமானவனை 'சதுர்புஜா' என்று அழைக்கிறார்கள். கை விலங் கிட்டுக் கைதியாகி இருப்பவனையும் 'சதுர்புஜா' என்கிறார்கள்.

எவ்வளவு சக்தி வாய்ந்த சொல்!

—வனஜா.

### எண்ணித் துணிக

சந்திரனுக்கே போய் வந்துவிட்ட அமெரிக்கர்கள், குப்பிகளில் மாத்திரைகளை எண்ணிப்போட மட்டும் மெஷின் கண்டுபிடிக்க வில்லை. கையால்தான் போட்டு வந்தார்கள். சென்ற ஆண்டுதான் அதை ஒருவர் கண்டு பிடித்து எக்கச்சக்கமாகப் பணம் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்.

—டைம்

அதற்குள் அவர் போய் விட்டார்.

மூன்றும் தேதி மாலை.

அலுப்போடு வந்து பழைய சோபாவில் சாய்ந்த வைத்திநாதன் கைகளைத் தலைக்கு மேல் கோத்துக் கொண்டு உத்த ரத்தைப் பார்த்தபடி இருந்தார்.

கையில் ஒரு கடிதத்து டன் உள்ளே வந்தாள் மனைவி செல்லம்.

"மணி கடிதம் எழுதி யிருக்கிறான். இந்தத் தடவை பத்து ரூபாய் சேர்த்து அனுப்பும் படி எழுதியிருக்கிறான்."

"இருந்தால் அனுப்பலாம்தான். இல்லையே! என்னோடு சேர்ந்து ஆண் பிள்ளை யாட்டம்' அந்தப் பெண்ணும்தான் கஷ்

டப்பட்டுச் சம்பாதித்துக் கொண்டு வந்து கொடுக் கிறது. அப்படி இருந்தும் நம்ம குடும்பத்துக்குக் கட்டி வரவில்லை. என்ன செய்வது? பெரியவ கல் யாணத்துக்கு வாங்கின

விஜயா—.

கடனை அடைக்கிறதா, ராஜாராம னுக்கு ஹாஸ்டல் பீஸ் அனுப்பறதா?... காலட்சேபம் பண்றதா?... சரி, மணி ஏழாகப் போகிறது. கமலா இன்னும் வர வில்லையா?"

"கொஞ்ச நாளா அவள் எட்டு மணிக்குத்தான் வரா. நீங்க வக்கீல் வீட்டு டியூஷனுக்குப் போன பிறகு வரு வாள்."

"ஏன் அவ்வளவு நேரம்?"

"என்னமோ ஆபீஸிலே நிறைய வேலையாம்."

"இந்தக் காலத்திலே எல் லாமே இப்படித்தான். யாராவது புதிசா வந்து மாட்டிக்கொண்டால், ஆபீஸ்லே இருக்கிற பழம் பெருச்சாளிங்க எல்லா வேலைகளையும் வந்தவர் தலையிலே கட்டி விடுவார்கள்."

"அது சரி. நீங்க இன்று வக்கீல் வீட்டுக்குப் போகவில்லையா?"

"இனிமேல் போக வேண்டிய தில்லை. பையன் கணக்கிலே ஐம்பது மார்க் குக்கு மேலே வாங்கிட்டானும். இனிமேல் டியூஷன் வேண்டாமாம்."

"இதுவும் போதாத வேளை தான். பாடுபட்டாலும் பலன் இப்ப டியா? அவன் முப்பத்தஞ்சுக்கு மேலே வாங்காதபடி பார்த்துட்டிருக்கனும். நீங்க."

"அது பணத்துக்காகப் பாடம் சொல்லித் தரவன் செய் யற காரியம். நான் பாடத்துக்காகத்தான் பாடம் சொல்லித் தரு வேன்."





"போதுங்க, நீங்க தொந்தியைக் கரைக்கக்கிற எக்ஸர்ஸைஸ் பண்றது! யாராவது பார்க்கறவங்க தப்பா நினைப் பாங்க, என் காலிலேதான் தினமும் இத்தினி வாட்டி விழறீங்களா ன்னு காட்டி டுமே!..."

"அதற்குக் கிடைச்ச பலனைப் பார்த்தீர்களா?"

"பலனைப் பற்றி யார் கவலைப் பட்டது? அது பரம்பொருள் இஷ்டம்!"

செல்லம் சிரித்தாள். ஏகத்தாள சிரிப்பல்ல அது. அவரையும் அவரது தத் துவங்களையும் புரிந்து உணர்ந்து கொண்ட பாசச் சிரிப்பு.

கமலா உள்ளே நுழைந்தாள் குடையும் கையுமாக. முகமெல்லாம் ஒரே அலுப்பு.

"ஏம்மா குழந்தை, இவ்வ ளவு நேரமா ஆபீஸிலேருந்து வர?" என்று பரிவுடன் விசாரித்தார் வைத்தி நாதன்.

"என்னப்பா செய்வது? ஆபீஸிலே புது மானேஜர் வந்திருக்கிறார். அன்றன்று வேலையை அன்றன்றே முடிச்சாகணும்னு கண்டிப்பா சொல்லிவிட் டார்," என்றாள் கமலா.

"வேலை வேண்டியதுதாம்மா, ஆனா, அதைச் செய்ய உடம்பும் வேணும். இப்படி உழைச்சா என்னத்துக்காகும்? நாளைக்கு நல்ல இடத்திலே வாழ்க்கைப் பட்டு நல்லபடியா வாழ வேண்டிய பொண்ணு. உடம்பையும் கவனித் துக்கொள்."

கல்யாணப் பேச்சு வந்ததும் கமலா ஓடி விட்டாள்.

**நா**ன்காம் தேதி மாலை.

பள்ளிக்கூட நிர்வாகியைப் பார்த்துப் பேசுவதற்காக வைத்திநாதன் மயிலாப்பூருக்குப் போயிருந்தார்.

"காப்பி சாப்பிட்டுக் கொண் டிருக்கிறார். இப்படி உட்காருங்கள்; வந்துவிடுவார்." என்று அவரை வராந்தா நாற்காலியில் உட்கார வைத்து விட்டுப் போனான் வேலைக்காரன்.

வைத்திநாதன் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

எதிர் வீட்டிலே யாரோ ஒரு பையன் நின்று கொண்டிருந்தான். கல் லூரி மாணவன் போலிருக்கிறது. செக்கச் செவேலென்று களையான முகமும் கவர்ச்சி யான உடையுமாகக் காணப்பட்டான். அடிக்கடி தெருவில் இரு புறமும் எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டேயிருந்தான். யாரையும் எதிர்பார்க்கிறானோ என்னவோ. ஆனால், அப்போது பார்த்து, அந்தத் தெருவே நடமாட்டமில்லாமல் இருந்தது.



# டிவிஎஸ் கட்டும் பாடிகள் பலவகையான டிசைன்களை உங்களுக்கு அளிக்கிறது

நீங்கள் தேர்ந்தெடுக்கும் எந்த டிசைன் வேண்டுமானாலும் டிவிஎஸ் கவலைக்கு இடமில்லாமல் கட்டித்தரும். ஒவ்வொரு பாடியின் அமைப்பும் மிக நேர்த்தியானது. உறுதியானது. அவை அதிர்ச்சியையும், ஆட்டத்தையும் தாங்கக்கூடியது. குறைந்த எண்ணெய்ச் செலவிற்கும், டயர் அதிகமாகத் தேயாத வகையில் இயங்கும் அமைப்பு கொண்டது. அசைவுஇல்லாதது. வசதி நிறைந்தது. இவை அனைத்தும் பல்லாண்டுகளுக்கு நீடித்திருக்கக்கூடியவை.

டிவிஎஸ்ஸில், பாடி கட்டுவதில் முன்னேற்றம் காணுவதற்குரிய சிறப்புப் பகுதி ஒன்று செயல்படுகிறது. அதில் இடைவிடாத சிந்தனையின் மூலம் மிகக் குறைந்தஎண்ணெய்ச்செலவிற்கான எடையுடன், கவர்ச்சிமிக்கதாயும், பார்வைக்கு அழகாகவும், சுலபமான ஓட்டச் சக்தியைக் கொண்டதாயும் உள்ள சீரிய முறைகளுடனும், அமைப்புக்களுடனும் நிபுணர்கள் பாடிகளை அமைக்கிறார்கள்.

டிவிஎஸ்-பாடிகள் கட்டுவதற்கு தாம் சோதிக்கப்பட்ட கச்சாப் பொருட்களையே உபயோகப்படுத்துகிறது. நீடித்து உழைக்கும் பாஸ்பேட்டட் MS ஷீட்டுகளையும், உயர்தர மரச்சாமான்களையும் உபயோகித்து. உறுதித்தன்மை கெடாமல் இருக்க கோட்டிங் செய்கிறார்கள். புதிய டிசைன்களை சாலைகளில் செயல்முறைச் சோதனை செய்த பின்னரே பாடி அமைப்பிற்கு தேர்ந்தெடுக்கப்படுகிறது.

ஒவ்வொரு பாடியையும் எல்லாவிதமான மிகக்கடினமான சோதனைகளுக்குப்பின்னரே டெலிவரி செய்கின்றனர்.

நீங்கள் டிவிஎஸ்ஸில் பாடிகட்ட ஆர்டர் கொடுத்தால் அவர்களுடைய பாடி கட்டும் தொழிலின் 45 ஆண்டு பழுத்த அனுபவத்தின்பயனையும் அடைவீர்கள்

**டிவிஎஸ் –இந்தியாவிலேயே மிகப்பெரிய பாடிகள் கட்டும்·ஸ்தாபனம்.**




**டிவிஎஸ் உங்கள் நம்பிக்கைக்கு உரியது**

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

மதுரை (இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)

SI-5300

திடீரென்று அந்த வாலிபனின் முகம் பிரகாச மடைந்தது. விருட்டென்று சட்டைப் பைக்குள் கையை விட்டு எதையோ எடுத்துத் தெருவோரமாகப் போட்டு விட்டு உள்ளே போய் விட்டான்.

அவனையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த வைத்திநாதன் வியப்புடன் அந்தப் பொருளைக் கவனித்தார்.

அது ஒரு பொட்டலம். நகை வைப்பதற்குப் பயன் படுத்தும் அந்தப் பொட்டலத்தில் என்ன இருக்கிறது? எதற்காக அதைத் தெருவில் போட்டு விட்டு அவன் ஒன்றும் தெரியாதவன் போல் உள்ளே போக வேண்டும்?

அடுத்த நிமிஷமே அதற்கு விடை கிடைத்து விட்டது.

தலை குனிந்தபடியே நடந்து வந்த ஒரு பெண் அந்தப் பொட்டலத்தை தாண்டி ஓரடி சென்று விட்டுப் பின்வாங்கி வந்தாள். பிறகு சுற்றும் முற்றும் பார்த்து விட்டு, விருட்டென்று குனிந்து பொட்டலத்தை எடுத்துக் கைப் பைக்குள் போட்டுக்கொண்டு சென்றாள்.

வைத்திநாதன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார். இந்தக் காலத்து இளசுகளுக்குத்தான் எவ்வளவு யோசனை! அவன் போடுவது போலப் போடுவானாம்; அவள் கண்டெடுப்பது போல எடுப்பாளாம். அவர்களுக்குள் அறிமுகமே இல்லையாம்! ஹஹஹா!

சிரித்துக் கொண்டிருந்த வைத்திநாதனின் சிந்தனை திடீரென்று விகாரமாகச் சுருங்கிற்று. அந்தப் பெண்.. அந்தப் பெண்...அவள் கமலாவைப்போல் இல்லை? கமலாதானா?

எழுந்து, சுற்றுச் சுவருக்கு மேல் பார்த்தார். அவள் போய் விட்டாள்.

கமலாவுக்கு மயிலாப்பூரில் என்ன வேலை இருக்க முடியும்? ஆபீஸ் இருப்பது எழும்பூரில். வீடு பெரம்பூர் பாரக்ஸில். அவள் இங்கே வருவானேன்? சே,சே! இது அவளாக இருக்க முடியாது. அந்த ஊதா நிறப் புடவை கமலாவிடம் கிடையாதே! மேலும் அறியாச் சிறுமி கமலாவா.....

வைத்திநாதனின் சிந்தனை பின்னிப் புரண்டது.

முதல் நாள் காலை கமலா போட்டுக் கொண்டிருந்த முகப்பவுடர். அவர் நினைவில் மணத்தது. அந்தப் புதுப் பவுடர் அவளுக்கு ஏது?

பணம் முழுவதையும் முழுசாகக் கொடுத்துவிட்ட அவள் பவுடர் எப்படி வாங்கியிருக்க முடியும்?

'கொஞ்ச நாளா அவள் எட்டு மணிக்குத்தானே வருகிறாள்.'

பழைய சம்பவங்களையும் சற்று முன் கண்ட காட்சியையும் ஒட்டுப்போட்டு பார்க்கவே சகிக்கவில்லை அவருக்கு.



## ர சனை

ஜேம்ஸ் ருபின் என்ற கலைஞருக்கு கல்கி திரு. சதாசிவம் தம் இல்லத்தில் ஒரு விருந்து உபசாரம் நடத்தினார்.

சாப்பாடு முடிந்தபின் மெயின் ஹாலில் திரு. செம்மங்குடி சீனுவாசய்யர் தம்புரா சுருதியுடன் கச்சேரி செய்தார். குடும்பத்தினரும் நண்பர்களும் சங்கீதத்தில் லயித்து மெய்மறந்தவர்களாகக் கச்சேரியை ரசித்துக் கொண்டிருந்தனர். திரு. சதாசிவம் சமிக்ஞையால் தம் குமாரியை அருகில் அழைத்து ஏதோ சொன்னார்.

அப்பா சொன்னதைப் பெண்ணும் நிறைவேற்றி வைத்தார். பெண் செய்த காரியம் என்ன?

சங்கீதத்தைப் பரிபூர்ணமாக அனுபவிப்பதற்குத் தடையாக 'டிக் டிக்' என்று ஒலித்துக்கொண்டிருந்த கடியாரத்தின் பெண்டுலத்தை நிறுத்தியதுதான். அதை நிறுத்தத்தான் சதாசிவம் கட்டளையிட்டார்.

—என். பி.

அப்படித்தான் இருக்குமோ?

வீட்டுக்குள் நுழைந்த வைத்திநாதன் சட்டையைக் கூட கழற்ருமல், "கமலா!" என்று கத்தினுர்.

கமலா வந்தாள். ஐயோ! ஊதாப் புடவை! புதுப்புடவை!

ஜிவ்வென்று உடல் முழுவதும் வெறியேறியது அவருக்கு. பளீரென்று புறங்கையால் அவள் கன்னத்தில் ஓங்கி அறைந்தார்.

எதிர் பாராமல் விழுந்த அறை அவளைக் கீழே தள்ளியது. சுவரோரமாய்ச் சுருண்டு விழுந்தாள்.

"என்னங்க என்ன ஆச்சு?" என்று பதறிக் கொண்டு ஓடி வந்தாள் செல்லம்.

"என்ன ஆச்சுன்னு உன் அருமை மகளைத்தானே கேள்!" என்று உறுமினுர் வைத்திநாதன்.

"என்னடி பெண்ணே ஆச்சு?"

அவள் திகைத்துப் போய் வாய் மூடியிருந்தாள்.

"நீங்கதான் சொல்லுங்களேன்!"- செல்லம் கெஞ்சினுள்.

"இந்த மாசம் உன்கிட்டே எவ்வளவு சம்பளம் கொடுத்தா?"

"அதான் முழுசையும் கொடுத்துட்டாளே! அப்புறம் எதற்கு அடிக்கிறீங்க?"

"அதனுலேதான் அடிச்சேன். முழுசையும் கொடுத்துட்டவளுக்குப் பவுடர் வாங்க, புடவை வாங்க, பணம் ஏது? தினம் ராத்திரி எட்டு மணிக்கு வீட்டுக்கு வருகிருள். அது வரைக்கும் என்ன செய்யாறு? எழும்பூரிலேருந்து பெரம்பூர் வர வேண்டியவளுக்கு மயிலாப்பூரிலே என்ன வேலே?"

மளமள வென்று கண்ணீர் வழிந்தது செல்லத்துக்கு.

"இதற்குத்தானு குழந்தையை அடிச்சீங்க? எங்கேயோ பிறந்து எவ்வளவோ சௌக்கியமா இருக்க வேண்டியவ, அவ தலேயெழுத்து, நம்ம வயித்திலேவந்து பிறந்துட்டா. வயசான அப்பா வாத்தியார் உத்தியோகம் பார்த்து சம்பாதிச்சு இப்படி வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்ட முடியாமத் திணறுவதைப் பார்த்து மனசு பொறுக்காம, ஆபீஸ் வேலேயோட இன்னெரு வேலேயும் கிடைச்சாப் பார்க்கலாமேன்னு இருந்தாளாம். இவள் ஆபீஸ் ஹெட் கிளார்க் கிழவர். ரொம்பத் தங்கமான மனுஷராம். இவ மேலே இருக்கிற பிரியத்தினுலே மயிலாப்பூரிலே தன் தம்பியோட ஜவுளிக் கடையிலே கணக்கெழுதறத்துக்கு ஏற்பாடு பண்ணினுராம். 'அப்பா ஏற்கனவேயே என் உடம்பு கெட்டு போச்சுன்னு அலுத்துக்கருர், அவர்கிட்ட சொன்னுல் வேண்டாம் என்பார்' என்ருள். 'சரிடியம்மா, உன் இஷ்டம்'னேன்.

அவர் விக்கித்து நின்ருர்.

செல்லம் பேசினுள். "கமலா இரண்டே புடவையை மாற்றி மாற்றிக் கட்டிக்கொண்டு வருவதைப் பார்த்து, இவளோட ஹெட் கிளார்க்தான் இந்தப் புடவையைக் கடனுகக் கொடுக்கச் சொன்னுராம். பவுடர் நான்தான் வாங்கிக்கச் சொன்னேன்."

"இதுதாம்பா நடந்தது.உங்கிட்டச் சொல்லாதது தப்புத்தாம்பா." என்று கமலாவின் குரல் கேட்டது.

குனிந்து பார்த்தார் வைத்திநாதன். களங்கம் கற்பிக்க முடியாத அந்த முகம் அவர் காலடியில் புதைந்து கிடந்தது.

வைத்திநாதன் கம்மிய குரலில், "பின்னே அந்தக் காலேஜ் பையன் கீழே போட்ட பொட்டலத்தைக் கமலா எடுத்துக்கொண்டு வந்தாளே...அது?" என்று கேட்டார்.

"அதென்னடியம்மா, என்னமோ சொல்ருர்?" என்று மகளைப் பார்த்தாள் செல்லம்.

"அதைப் போட்டது யாரென்று எனக்குத் தெரியாதப்பா. கீழே கிடந்தது எடுத்துக்கொண்டு வந்தேன். இன்னும் பிரிச்சுக்கூடப் பார்க்கலே," என்றவள் கைப்பையை எடுத்து வந்தாள்.

வைத்திநாதன் பொட்டலத்தைப் பிரித்தார்.

உள்ளே இருந்தது நாலேந்து கற்களும் ஒரு காகிதமும்தான். அதில் எழுதியிருந்தது: "ஆசையோடு அக்கம் பக்கம் பார்த்து இதை எடுத்த அன்பரே, பிறர் பொருளுக்கு ஆசைப் படாதீர். அது துன்பம் தரும்!"

"தூ! இதுவும் ஒரு விளையாட்டா!" என்ருள் செல்லம்.

"விளையாட்டல்ல. வாழ்க்கைத் தத்துவம்," என்ற வைத்திநாதன் கமலாவின் தலேயைத் தடவிக் கொடுத்தார்.

# எழில்...

அழகு; வனப்பு; மேன்மை; கவர்ச்சி; என்றும் பொருள் உண்டு ...... அல்லது ஹேண்ட்லூம் ஹவுஸ் பட்டுப்புடவைகள் என்றும் பொருள் சொல்லலாம்.



கல்யாணமா, பண்டிகையா?
எக்காலத்துக்கும் ஏற்ற வகையில்
வண்ண வண்ண எழிலுடன் திகழும்
பட்டுப் புடவைகள் மற்றும்
எண்ணற்ற ரகங்கள் ஹேண்ட்லூம்
ஹவுஸில் உள்ளன.

## ஹேண்ட்லூம் ஹவுஸ்

9, ரத்தன் பஜார்,
சென்னை-3

9

முகமூடி

லீ:.பாக்

1-1-70

வெற்றி மேல் வெற்றி கிடைத்ததும் கடத்தல்காரர்களின் துணிச்சல் அதிகமாயிற்று.

NO SMOKING

இந்தப் பிளேனை நாங்கள் எடுத்துக் கொள்ளப் போகிறோம். அசையாமல் உட்கார்ந்திருந்தால் ஆபத்து ஒன்றும் வராது.

!?!

பத்திரிகைச் செய்தி

WORLD NEWS

பன்னிரெண்டாவது முறையாக மற்றொரு பிளேன் கடத்தல்

இந்த விமானங்களை யார் எங்கே கடத்திச் செல்கிறார்கள்?

சீப் சீராளரின் இரகசிய விமான நிலையத்தில்—

பெர்ஸி, இப்போதைக்கு இவ்வளவு போதும் அடுத்து ஆக வேண்டியதைக் கவனிப்போம்.

ஓ.கே. பாஸ்.

பிளானெட் ஏர் வேஸ் கம்பெனியில்—

'கடத்திச் செல்லப்பட்ட விமானங்களில் ஆறு உங்களுடையவை. கடைசி ராடார் ரிப்போர்ட்டுகள் இந்த வட்டாரத்தில் இருந்து தான் வந்திருக்கின்றன. ஆயிரம் மைல் பரப்பில் ஒரே ஒரு விமான நிலையம் தான் இருக்கிறது—அது சீராள மன்னருடையது.

அத்தாட்சி?

அத்தாட்சி கிடையாது. சும்மா ஊகம்.

வெறும் ஊகங்களால் எங்களுக்கு உபயோகம் இல்லை. போய் வாருங்கள்.

PRESIDENT


எல்லோரும் வெளியேறுங்கள்- சீக்கிரம்!
அக்கிரமம்!
PACIFICAN
எங்கள் லக்கேஜ்?


அக்கிரமம் மட்டுமா? பெரிய மர்மமாகவும் இருக்கிறது.
6-22




முகமூடியிடம் டயானா கேட்கிறாள்
இந்த விமானங்களெல்லாம் எங்கே இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?
பிளானெட் ஏர்வேஸ் கம்பெனியின் அதிபரை நான் சந்திக்க வேண்டும். உடனே ஏற்பாடு செய்.
SY BARRY 6/22


விமானக் கம்பெனிக்கு அப்போது ஒரு கடிதம் வந்தது.
உங்கள் விமானங்களில் ஆறை யாரோ என் ராஜ்யத்தில் விட்டுப் போயிருக்கிறார்கள். அதைப் பற்றி பேச யாரையேனும் அனுப்புங்கள்.
ரகசியம்.
எங்கே அந்த ஆள்?


கூப்பிடுவீர்கள் என்று ஊகித்துக் காத்திருந்தேன்.
PRESIDENT
!?
தொடரும்
THE PHANTOM




நல்லுணவுக்கு உரியது நல்ல சமையல்

சமைக்க் உபயோகியுங்கள்

# துஷார்

வனஸ்பதி



துங்கபத்ரா
இண்டஸ்ட்ரீஸ் லிட்..
கர்நூல்.

ASP-TIL-T-31 TAM

"கொஞ்சம் பணம் சம்பாதிக்கலாம் வருகிறாயா? நீ துணை செய்தால் போதும்," என்று 29 வயது ஜான்ஸன், தன் தோழன் ஸ்மித்தை அழைத்தான். இடம்: அமெரிக்காவில் ஸெயிண்ட் லூயி என்ற ஊரில், மதுபானக்கடை. நேரம்: இரவு.

ஸ்மித்திடம் கைத்துப்பாக்கி இருந்தது; ஜான்ஸஸனிடம் கத்தி இருந்தது.

ஹெர்மின் ராஸ் என்ற கிழவியின் வீட்டுக்குள் பிரவேசித்தார்கள் இருவரும். கொஞ்சநாள் முன்பு ஒரு குழாய் ரிப்பேருக்காக அங்கே போயிருந்தான் ஜான்ஸன். அப்போதே 'கண்' வைத்திருந்தான் போலும்.

ஹெர்மின் ராஸுக்கு வயது 60. அவள் வாயை அடைத்துவிட்டு, மேஜைகளையும் அலமாரிகளையும் புரட்டித்தள்ளினார்கள் இருவரும். வெளியே போயிருந்த கிழவியின் மகன் வில்லியும், அவனுடைய இளம் மனைவி மெரிலினும் திரும்பி விட்டார்கள். மெரிலின் ஐந்து மாத கர்ப்பிணி.

### கத்தி முனையில்

கத்தி முனையில் அவர்களையும் அடக்கினார்கள். தாய், மகன், மருமகள் மூவரையும் உடைகளைக் களைந்து தெறியும்படி கட்டாயப்படுத்தினார்கள். பிறகு, தங்கள் கண்ணெதிரிலேயே வில்லி தன் தாயிடம் உறவு கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். வில்லி மறுத்தான் உறுதியாக. அவனைக் கத்தியினால் குத்திக் கொன்றார்கள். பிறகு கிழவியையும் கொலை செய்தார்கள். மெரிலின் அடுத்த அறைக்கு இழுத்துச் செல்லப்பட்டு, இருமுறை கற்பழிக்கப்பட்டாள்.

தோழர்கள் வெளியேறும்போது ஜான்ஸன் திடுமென்று மெரிலினையும் குத்தினான். "எதற்காக அவளையும் கொலை செய்தாய்?" என்று ஸ்மித் கேட்டபோது, "நான் குழாய் ரிப்பேர் செய்ய வந்தவன் என்று நாளைக்கு அடையாளம் காட்டிவிடுவாளோ என்னவோ," என்றான் ஜான்ஸன்.

அவன் அச்சம் சரியானதுதான். குற்றுயிரும் குலையுருமாக இருந்த மெரிலின் எப்படியோ டெலிபோனை எடுத்தாள். குரல்வளை அறுத்திருந்தபோதிலும் போலீசைக் கூப்பிட்டு, தங்கள் இல்லத்தில் நிகழ்ந்த பயங்கர நிகழ்ச்சியைத் தெரிவித்தாள்.

### கடைசி வரையில்

ஆஸ்பத்திரியில் அவளுடைய ஐந்துமாதச் சிசு இறந்து பிறந்தது. அவளும் ஒருவாரம் கழித்துஇறந்து போனாள். ஆனால் இறப்பதற்கு முன்பு, கொலையாளிகளில் ஒருவன் தன் வீட்டுக்குக் குழாய் ரிப்பேர் செய்ய வந்திருந்தவன் என்பதைத் தெரிவித்தாள். அடையாளமும் சொன்னாள். அவள் வீட்டில் ஜான்ஸன் கொடுத்த ரசீது இருந்தது. அதைக்கொண்டு ஜான்ஸனையும், அவன் மூலம் ஸ்மித்தையும் பிடித்தார்கள்.

—டைம்



கறுப்புப் போர்வை கவிந்திருந்தது. இருளின் ரகசிய பாஷை வீட்டோடு. அமைதியின் பேரெழில் ஆட்சி புரிந்தது.

வாசுவின் கால்கள் தயங்கின. வாகீஸ்வரி தூங்கிக் கொண்டிருப்பாள். ஒருவேளை விழித்துக் கொண்டிருந்து தொலைத்தால்? வாரிக் கட்டிக் கொள்வது யார்? அவன்தானே?

அப்படி அவன் செய்துவிட்ட தவறுதான் என்ன?

"இதோ பாருங்கள். எல்லா நாளும் ஏமாற்றியது போல இன்றைக்கும் என்னை ஏமாற்றக் கூடாது. ஆபீஸ் விட்டதும் நேரே வீட்டுக்கு வந்து சேர்ந்து விடுங்கள். இன்றைக்குக் கட்டாயம் நாம் ஒரு சினிமாவுக்குப் போயே ஆக வேண்டும்," என்று எச்சரிக்கை கொடுத்து விட்டு சிவப்புக் கொடியோடு நின்றாள்.

பலி கிடா போல் தலையை ஆட்டினால் மட்டுமே, அவன் வெளியே போவதற்கு 'பச்சை விளக்கு' காட்டப்படும்போல் இருந்தது. அதற்குப் பயந்தே அவன் தலையை ஆட்டி வைத்தான்.

அவனும் மிகவும் எச்சரிக்கையோடுதான் நடந்து கொண்டான். நான்கு மணிக்கே ஆபீஸ் கடமைக் கழிக்கும் வேலையை முடித்துவிட்டு மானேஜர் அறைக்குள் போய்க் கழுத்தை நீட்டினான்.

அவனுடைய அதிர்ஷ்டம், அலுவலக ஊழியர்களால் 'கடுவன் பூனை' என்று செல்லப்பெயர் இடப்பட்ட சுவாமிநாதன் வழக்கத்துக்கு விரோதமாக மலர்ந்த முகத்தோடு, "அடே! உம்மைத்தான் கூப்பிடலாம் என்று இருந்தேன். அதற்குள் நீரே வந்துவிட்டீர்," என்று வரவேற்றபோதே விதியின் விளையாட்டை எண்ணி நொந்து கொண்டான் வாசு.

அந்தக் கோரப் பிடியிலிருந்து தப்ப முடியுமா? மானேஜர் அன்பொழுகச் கூறியதாவது:

"வாசு! இன்றைக்கு என் மாமியார் ஊரிலிருந்து வருகிறாள். அவளை நீர் கொஞ்சம் சிரமம் பார்க்காமல் போய் ஸ்டேஷனிலிருந்து அழைத்து வந்து விடும்." உத்தரவை அவன் கையில் கொடுத்தார் அந்த மகானுபாவன்.

'ரிடையர் ஆகப்போகும் மானேஜரை முறைத்துக்கொள்ளக்கூடாது' என்று அடங்கி விட்டான். ரிடையராகிப் போகிற போக்கில் ஆசாமி தன்னுடைய ரிகார்டில் கையை வைத்துவிட்டுப் போய்விட்டால் என்ன செய்வது என்ற பயம்தான் காரணம்.

இந்த ஐம்பத்தைந்து வயது மானேஜரின் எண்பத்தைந்து வயது மாமியார்க் கிழத்தை ஸ்டேஷனிலிருந்து ஏற்றுமதி செய்து கொண்டு சுவாமிநாதனின் வீட்டில் இறக்குமதி செய்து விட்டு வரும்போது மழை பிடித்துக் கொண்டது.

இவ்வளவு காரணத்தையும் வாகீஸ்வரியிடம் சொன்னால் அவள் நம்பப் போகிறாளா என்ன?

'சாமி பகவானே! அவள் தூங்கிக் கொண்டிருக்க வேண்டும்' என்று வேண்டிக் கொண்டான். நிலைமை மீறிப்போனால் 'சடாரென்று' காலைப் பற்றிக் கொண்டு ஒரு குறை அழுது விடுவதென்று முடிவு செய்து கொண்டு, கொஞ்சம் நஞ்சம் இருந்த தைரியத்தைத் துணைக்குச் சேர்த்துக் கொண்டான்.

வாசு எதிர்பார்த்தது போல் வாகீஸ்வரி தூங்கிக்



கொண்டுதான் இருந்தாள். வீட்டில் துளி வெளிச்சம் இல்லை. ஏன், அந்தக் காலனியிலேயே எந்த வீட்டிலும் வெளிச்சம் இல்லை. 'எலக்ட்ரிக் சப்ளை' நின்றுபோய் இருந்தது.

கையை வைத்தவுடன் கதவு தானே திறந்து கொண்டது. சோற்றைத் தியாகம் செய்துவிட்டு, சும்மாக் கட்டையைக் கிடத்த வேண்டியதுதான்.

ஓசைப்படாமல் தன் சட்டையைக் களைந்துவிட்டு, கட்டிலில் படுத்திருந்த வாகிஸ்வரியின் அருகில் படுத்துக் கொண்டான்.

'அப்பாடா'—வாசு தப்பித்துக் கொண்டான்!

இன்னும் குளிர் அடங்கவில்லை. வளையல்கள் குலுங்கின! அந்த சப்தம் தேனாய் வாசுவின் காதில் இறங்கியது. புடவையின் சரசரப்பு அவன் நினைவை எங்கேயோ இழுத்துச் சென்றது. மல்லிகை புஷ்பம் வேறு தன் வாசத்தை வாசுவின் மேல் உரசிச் சென்றது.

வாசுவின் மேல் வாகிஸ்வரி வைத்திருந்த கோபம் வடிந்து போய் விட்டதோ என்று சந்தேகமாக இருந்தது.

வாகிஸ்வரி விழித்துக்கொண்டுதான் இருக்கிறாளோ?

லேசாக ஒரு தரம் உரசிப் பார்த்தான். அவளொன்றும் அசையக் காணோம். கோபம் தணியவில்லையோ?

# உஷ்... வெளியே சொல்லாதே!

'கமலேஷ்'










மேலும் சீண்டத் தைரியமின்றி கட்டிலலிருந்து இறங்கித் தரையில் படுத்துவிட்டான்.

விடிந்தது.

வாசு தன் கைகளை முறித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். அவன் அருகில் வாகீஸ்வரி வந்து நின்றாள்.

''நேற்று நீங்கள் சொல்லிய படி சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகாததே நல்லதாய்ப் போய்விட்டது, இல்லையென்றால் வந்தனா மூன்று மணி நேரம் காத்திருக்கும்படியாக நேர்ந்திருக்கும். அதோடு இன்னொரு விஷயம் வேறு. நான் நேற்று சாயந்தரமே 'வீட்டுக்கு வெளியே' உட்கார்ந்து விட்டேன்.''— வாகீஸ்வரி என்ன சொல்கிறாள் என்று வாசுவுக்குப் புரியவில்லை!

வாசுவின் 'திருட்டு விழி' வாகீஸ்வரியைப் பயமுறுத்தியது.

''என்ன இப்படிப் 'பேய்முழி' முழிக்கிறீர்கள்?''

''அப்படியானால் கட்டிலில் படுத்திருந்தது 'யார்?''

''ஏன், வந்தனாதான்!''

''வந்தனாவா.?''

''ஆமாம்..அவள்தான். நான் வீட்டுக்கு விலக்காச்சே. உள்ளே கட்டிலில் படுக்க வேண்டாமென்று புழக்கடைப் பக்கம் படுத்துவிட்டேன்.''

வாசுவுக்கு உடம்பே ஸ்தம்பித்து விட்டது.

அதேசமயம், வேகமாக உள்ளே வந்தான் சத்தியம்— வந்தனாவின் கணவன். அவனை, ''இவ்வளவு காலையிலேயே எங்கே போய்விட்டு வருகிறீர்கள் அத்தான்?'' என்று வரவேற்றாள் வந்தனா.

''காலையில் போனேனா.. சரியாய்க் கேட்டாய் போ.. நேற்று ராத்திரி ஒருவரைப் பார்க்க வேண்டும் என்று போனேன் அல்லவா .. ராத்திரி அங்கேயே தங்கிவிட்டேன். இப்போது தான் வருகிறேன்,'' என்று சொல்லிவிட்டு நிறுத்தினான்.

இதைக் கேட்டுக் குடித்துக் கொண்டிருந்த காப்பி டம்ளரை கைநழுவ விட்டாள் வந்தனா. பதட்டம்.. அவள் உடம்பை வெடவெடக்கச்செய்துவிட்டது, சிந்திய காப்பியைத் துடைத்து விட்டு நிமிர்ந்து வாசுவைப் பார்த்தாள்.

வாசு மேல் துண்டால் தன் முகத்தை வந்தனாவுக்குக் காட்ட விரும்பாமல் துடைத்துக் கொண்டான்.

# நாகேஷ்

## படத்தை எடுத்துப்பார்-8

குழப்பத்தின் முடிவில் கணக்குப் போட்டு பார்த்தோம்.

### செட்டைப் பிரித்தோம்

செட்டைப் பிரிக்காமலிருந்தால் அதனால் ஏற்படும் காலதாமதத்திற்கு தினசரி சுமார் ரூ.250 வீதம் ஆறு வாரங்களுக்கு 250×42 =ரூ. 10,500 ரூபாய் 'வெயிட்டிங் சார்ஜ்' கொடுக்க வேண்டியிருக்கிறது. அதுபோக கால்குணம் அடைந்து பிறகு கால்ஷீட் கிடைத்துப் படமாக்கி முடியும் வரை செட் வாடகை கொடுக்க வேண்டியிருக்கும்.

அந்த செட்டை நிர்மாணிக்கவே சுமார் 12000 ரூபாய் செலவாகியிருக்கிறது. ஆகையால் நிர்மாணிக்கும் செலவை விட 'வெயிட்டிங் சார்ஜும்', செட் வாடகையும் அதிகமாகி விடும் பொழுது செட்டைக் கலைத்துவிடுவதே புத்திசாலித்தனம் என்னும் முடிவிற்கு வந்தோம்.

மற்ற விஷயங்களைப் போகப் போக முடிவு செய்து கொள்ளும் எண்ணத்தில் செட்டைக் கலைத்துவிடும்படி டைரக்டர் ராமசாமியிடம் சொல்லி 'ஸ்கிரீன் எண்டர் பிரைசஸ்' படப்பிடிப்பிற்காக நான் கோவா புறப்பட்டேன்.

### நாகேஷ் பாடலாமா?

கோவாவிலிருந்து சென்னைக்குத் திரும்பிய என்னிடம் என் மனைவி ஒரு கட்டுக் கடிதங்களைக் கொடுத்தாள். அவைகளைப் பிரித்துப் படித்தேன்.

அந்தக் கடிதங்களை எழுதியிருந்த அனைவரும் என் கட்டுரையைப் பாராட்டியிருந்தனர். அதேசமயம் குறிப்பாக ஒரு விஷயத்தில் குழப்பமடைந்து என்னை அதற்கு விளக்கம் கேட்டு எழுதியிருந்தனர் சிலர்.

உதாரணத்திற்கு, திருச்சியிலிருந்து திரு. எம். ராஜரத்தினம், சி. ஞானசந்த் இருவரும் எழுதிய கடிதத்தை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

"நாகேஷ் திக்கித் திக்கி பேசும் கேரக்டர் என்று எழுதியிருக்கிறீர்கள்;



கே. பாலசந்தர்

# பாட வைத்தது



ஆனால் 4-12-69-ம்தேதி இதழில் நாகேஷ் பாடும் பாட்டு உச்சஸ்தாயியில், ராகத்துடனும், சுருதியுடனும் அமைந்திருப்பதாக எழுதியிருக்கிறீர்கள். திக்கித்திக்கிப் பேசும் ஒருவன் பாடுவதாக எங்களால் கற்பனை பண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை! ஆனால் தங்களின் டைரக்ஷனில் வளரும் 'நவக்கிரக'த்தில் அது எப்படி சாத்தியமாகும்?''

இதேமாதிரி திருச்செந்தூரிலிருந்து திரு. சுடலைமுத்து என்பவரும் எழுதியிருந்தார்.

''திக்கிப்பேசும் ஒருவர் சரளமாகப் பாட முடியுமா?'' என்னும் கேள்விக்கு ஒரு முறைக்குப் பல தடவை பதில் தெரிந்து கொண்ட பின்னரே நான் அக் கதாபாத்திரத்திற்குப் படத்தில் பாட சந்தர்ப்பம் அளித்தேன்.

### பிரபல நடன டைரக்டர்

# சரியா?

பிரபல நடன டைரக்டர் கே. என். தண்டாயுதபாணி பிள்ளை அவர்களைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் ஓரளவு திக்கிப் பேசினாலும் 'ஜதி' பாடும்பொழுது மிகவும் சரளமாகப் பாடுவார் என்றும் பலர் கூறக் கேட்டிருக்கிறேன்.

அனந்த் சிலரை விசாரித்து வந்து ராயபுரத்தில் செல்வராஜ் என்பவர் பேசும்பொழுது மட்டுமே திக்குவார் என்றும் ஆனால் அனாயாசமாகப் பாடுவார் என்றும் என்னிடம் கூறினார்.

எனக்குத் தெரிந்த பட வினியோகஸ்தர் திரு. ஆர். எம். ராஜு என்பவருக்கு நெருங்கிய உறவினர் ஒருவர் திருச்சி மெயின் பஜாரிலுள்ள இந்தியன் பாங்கில் பியூனாகப் பணியாற்றிவருகிறார். அவர் பெயர் ஆர். வேலுச்சாமி. அவர் கூடத் திக்கிப் பேசுவார் என்றும் ஆனாலும்

சரளமாகப் பாடக் கூடியவர் என்றும் ராஜு என்னிடம் கூறியிருந்தார்.

இத்தனை விசாரணைக்குப் பிறகு தான் நாகேஷைப் பாடவைப்பது என்னும் முடிவுக்கு வந்தேன். அதன்படி அவர் பாடுவதாக இருந்த 'நவக்கிரகம்.. நீங்க நவக்கிரகம்' வசனநடைப் பாடலில் மட்டும் சில இடங்களில் திக்குவதாக ஒலிப்பதிவு செய்தேன். ''எல்லாமே வயத்துக்குத்தாண்டா'' பாடலில் வேண்டுமென்றே ஓரிடத்தில்கூட அவர் திக்குவதாகச் சேர்க்கவில்லை.

எதற்கும் இன்னொருமுறை

ஒலிப்பதிவு வேலைகள் முடிந்திருந்தாலும் கூட நேயர்கள் கடிதங்களைப் பார்த்தபிறகு இந்த விஷயத்தை மற்றுமொருமுறை ஊர்ஜிதம் செய்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. அனந்திடம் கடிதங்களைக் காட்டி, ''என்ன செய்யலாம்?'' என்றேன்.

அப்பொழுது அங்கே 'பத்தாம் பசலி' புரொடக்ஷன் மானேஜர் அம்பி வந்து சேர்ந்தார். கோல்டனில் செட் ரெடியாகிக் கொண்டிருப்பதை தெரிவித்துப் போகவே அவர் வந்திருந்தார். அவரிடம் அனந்த் விஷயத்தை விளக்கியதும் ''எங்க முதலாளியோட (ஆலங்குடி சோமு) தம்பி ஒருவர் இருக்கிறார். அவர் பெயர் சுப்பையா. அவர்கூடத் திக்கித் திக்கித்தான் பேசுவார். ஆனால் பாட்டுப் பாடினால் தியாகராஜபாகவதர் தோற்றார் போங்கள். திக்காமல் அப்படிப் பாடுவார்'' என்றார்.

நான் நிம்மதி அடைந்தேன்.

தந்தை திக்கினால் மகனும் திக்கவேண்டுமா?

நாகேஷ் திக்கிப்பேசும் விஷயத்தை மட்டும்தான் குறிப்பிட்டிருந்தேன். மற்றொரு விஷயத்தை நான் சொல்லவில்லை. அதாவது படத்தில் நாகேஷின் தந்தையாக வரும் சுந்தரராஜன் திக்கித் திக்கித் தான் பேசுவார்.

கதை அமைப்புப்படி இருவரும் ஒரே வீட்டில் இருந்தாலும் கூட ''இவர் நம் தந்தை'' என்று மகனுக்கோ, ''இவன்தான் தன் பையன்,'' என்று தந்தைக்கோ தெரியாது. கடைசியில் தெரிய வரும்பொழுது திக்கிப்பேசும் பரம்பரை வழக்கம் அந்த உறவை உறுதிப் படுத்தவேண்டும் என்பதற்காகவே இப்படி அமைத்திருந்தேன்.

''தந்தை திக்கினால் மகனும் திக்கவேண்டும் என்பது என்ன அவசியம்?''

''கதைக்கு அவசியமாக இருப்பது ஒரு காரணம். தவிர உண்மையிலும் அப்படி ஒரே குடும்பத்தில் பலர் திக்குவது உண்டு!'' என்றேன். உதாரணத்திற்கு எங்களுக்குத் தெரிந்த ஒருவர் குடும்பத்தைக் குறிப்பிட்டேன். அந்தக் குடும்பத்தில் நான்கு சகோதரர்கள். அவர்கள் நால்வருக்குமே திக்கிப்பேசும் பழக்கம் உண்டு. இந்தப்பழக்கம் அவர்கள் தந்தைக்கும் இருந்ததாம்!

படத்தில் நாகேஷ் திக்கித் தான் பேசவேண்டும் என்னும் நிர்ப்பந்தத்திற்கு ஏதாவது காரணம் இருக்க

---



மனைவியிடம் பொய்யே பேசி அறியாத . மனச்சாட்சியுள்ள ஓர் அபூர்வக் கணவன் மகாபலிபுரம் சென்றுவிட்டு வந்தான், நண்பர்களுடன். உல்லாசப்பயணம் போய் வந்ததைப்பற்றி மனைவிடம் இப்படிக் கூறினான். ''நேற்று பூராவும் நண்பர்களுடன் ரம்மியமாகக் கழித்தேன். ரம்மியத்தைத்தவிர வேறொன்றும் என் கண்ணில்படவில்லை.''

மனைவிக்குப் புரிந்ததோ இல்லையோ. அவன் கூறியது, தான் நண்பர்களுடன் மகாபலிபுரத்தில் நாள்பூரா ரம்மி ஆடியதைத்தான்!

—எல்லோரா

## மகாபலிபுர மர்மம்

வேண்டுமல்லவா? அதையும் கூறிவிடுகிறேன்.

மாதுவும் பாலுவும்

'எதிர் நீச்சல்' மாதுவைப் போல இந்த 'பாலு'வும் பிறருக்காகப் பாடுபடுகிறுன். குறிக்கோளில் மட்டும் தான் இந்த இரு கதாபாத்திரங்களுக்கும் ஒற்றுமை உண்டே தவிர அதை நிறை வேற்றப் பாடுபடும் வகையில் மாதுவிடமிருந்து 'பாலு' வைத் தனித்து நிற்கச் செய்ய நினைத்தேன்.

'மாது' தன்னைப் பிறருக்குச் சாதகமாக்கிக் கொண்டு தன் லட்சியத்தை நோக்கி நடந்தான்.

ஆனுல் பாலுவை நான் அப்படிச் செல்லவிடாமல், பிறரைத் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டு அதே 'ஒன்று சேர்க்கும்' லட்சியத்திற்காகப் பாடுபடவைக்க நினைத்தேன்.

இன்னும் சொல்லப்போனுல் மாது ஒரு இலட்சியக் கதாபாத்திரம். [Ideal Character] யாருக்கும் தீங்கு செய்யவோ, யாரையும் ஏமாற்றவோ மனத்தால் கூட நினைக்காத ஒரு கதாபாத்திரம். ஆனுல் பாலு நடைமுறையில் வாழும் கதாபாத்திரம். (Living Character.) சுருக்கமாக இந்த இருவரின் வித்தியாசத்தை ஆங்கிலத்தில் 'The world used Madhu of Edhir N echal to its advantage, whereas Balu of Navagraham used the world to his advantage' எனக் குறிப்பிடலாம்.

ஆகையால் அந்தக் குடும்பத்திலுள்ள ஒன்பது பேருக்கும் பாலுமீது தனிப்பாசம், பரிவு பிறக்கவேண்டும். இதற்கு என்ன செய்வது?

இறுதியில் திக்குவாயனுக அவனைப் படைத்தால் என்ன எனத் தோன்றியது எனக்கு.

பொதுவாக ஊமை, குருடு செவிடு இவர்கள்மீது ஏற்படும் பரிவு திக்கிப் பேசுகிறவர்களுக்கும் கிடைக்கும் என்பது என் நம்பிக்கை.

அனந்த் இதற்கு ஒரு ஆட்சேபணையை தெரிவித்தார்.

கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டகதை மாதிரி பரிவுக்காக பாலுவைத் திக்கவைக்கப்போய் அதுவே பரிகாசத்திற்குரிய, கேலிக்குரிய கதாபாத்திரமாக மாறிவிட்டால் என்னசெய்வது என்பதே அனந்தின் கேள்வி.

(தொடரும்)

பேட்டி: திரைஞானி

## 44. பட்டன் திட்டம்

குருநாதர் நிபந்தனைகளை ஏற்பதுபோல் ஏற்று அவற்றுக்கு நான்கு பக்கத்திலும் தளைகளைக் கட்டிவிடத் தீர்மானித்த மன்னவின் தந்திரத்தையும் அந்தத் தந்திரத்தின் விளைவாகப் பிறப்பித்த உத்தரவுகளையும் நினைத்தே வியப்பும் பிரமிப்பும் அடைந்த சேனுதிபதிக்கு மன்னனின் கடைசி இரு உத்தரவுகள் பேரதிர்ச்சியை அளித்தன. ஆரம்ப உத்தரவுகளைக் கேட்டுக் கொண்டு கிளம்ப முயன்று அறைவாயிலை நோக்கி அடி எடுத்து வைத்த சேனுதிபதியை, "சேனுதிபதி!" என்ற மன்னன் குரல் சற்றே தடுத்ததால் அவன் மீண்டும் திரும்பினுன் மன்னனை நோக்கி. மன்னன் சேனுதிபதியை வினவினுன் சர்வ சாதாரணத்துடன். "நமது பெரிய ராணி பவனி போகும் வண்டி சரியாயிருக்கிறதா?"

சேனுதிபதியின் முகத்தில் குழப்பம் தெரிந்தது. "சரியாகத்தானிருக்கும். மன்னர் பவனி ரதமும் சரி; பட்டத்து ராணியார் வண்டி மட்டுமின்றி இளையராணியின் வண்டிகூட அடிக்கடி பழுது பார்க்கப்படுகின்றன. ஆகையால் சரியாகத்தானிருக்கும்," என்று விடை கூறினுன் சேனுதிபதி.

"அதை ஊகத்தில் விட வேண்டாம். அரண்மனை ரதவேலைக்காரர்களைக் கொண்டு சோதிக்கச் செய்யும். சரியாயில்லாவிட்டால் செப்பனிடச் செய்யும். எப்பொழுதும் பட்டத்து ராணி வண்டி நீண்ட பயணத்துக்குத் தகுதியுள்ளதாயிருக்கட்டும்,"என்று உத்தரவிட்டான் மன்னன்.

இந்த உத்தரவின் காரணத்தை உணராத சேனுதிபதி மேலும் குழப்பமே அடைந்தானென்ருலும் அதை வெளிக்குக் காட்டாமல், "சரி மன்னவா," என்று பதில் சொன்னுன்.

"சாதாரணமாக பவனி வண்டியை இழுக்க அடக்கமாகச் செல்லும் புரவிகளைத்தான் கட்டுவது வழக்கம்,"என்று சுட்டிக் காட்டினுன் மன்னன்.

"ஆம்," என்ற சேனுதிபதி மன்னனை நோக்கி விழித்தான்.

"அந்த வழக்கத்தை மாற்றிவிடும்," என்ருன் மன்னன் சாதாரணமாக.

"மன்னவா!" சேனுதிபதியின் சொல்லில் வியப்பு மிதமிஞ்சி நின்றது.

"என்ன சேனுதிபதி?"என்று வினவினுன் மன்னன் சேனுதிபதியின் வியப்பைக் கவனிக்காததுபோல.

"பட்டத்து ராணியார் பவனியில், அதிக வண்டியாட்டம் இல்லாமல் பவனி சொகுசாயிருப்பதற்கே அடக்கமான புரவிகள் அவ்வண்டியில் கட்டப்படுகின்றன." என்று இழுத்தான் சேனுதிபதி.

ராஜமுத்

"இது சொகுசுக்குக் காலமா?" என்று வினவிய வீரரவியின் கேள்வியில் விஷமம் இருந்தது.

"இல்லை."

"போர் தலைநகரை அநேகமாக நெருங்கிவிட்டது."

"ஆம் மன்னவா."

"ஆகவே ராணியின் பவனிக்கும் காலமில்லை."

"இல்லை, இல்லை."

"ஆகவே வேகமாகச் செல்லக்கூடிய புரவிகளை அந்த வண்டிக்கு ஏற்பாடு செய்துவையும். எந்த நேரத்திலும், இரவானுலும் சரி, பகலானுலும் சரி, அந்த வண்டி புறப்படத் தயாராயிருக்கட்டும். தவிர அதன் திரைச் சீலைகளை மாற்றி நல்ல கெட்டி, திரைச் சீலைகளை அமைத்து வையும். அதைக் காவல் புரிந்து செல்ல நான்கு வீரர்கள் எப்பொழுதும் தயாராயிருக்கட்டும்."

மன்னன் உத்தரவைக் கேட்ட சேனுதிபதி அதன் காரணத்தை உள்ளூரப் புரிந்து கொண்டதைக் காட்டும் பாவனையில், "மன்னர் சித்தம். தங்கள் உத்தரவுப்படி ஒரு போர்க் கப்பலைத் தனிப்பட நிறுத்திவைக்கிறேன். அதை நோக்கிச் செல்ல பவனி வண்டியையும் சித்தமாக வைக்கிறேன். வண்டி செல்லவேண்டிய பாதையையும் நிர்ணயித்து வைக்கிறேன்," என்ருன்.

மன்னன் இதழ்களில் புன் முறுவல் விரிந்தது. ''சேனாதிபதி! நீர் மிகுந்த அறிவாளி,'' என்று பாராட்டினான் அந்த முறுவலுடன்.

''மன்னருக்கு அது ஒருநாள் புரியும் என்ற நம்பிக்கை உண்டு எனக்கு,'' என்றான் சேனாதிபதி.

சேனாதிபதியின் குத்தலுக்குக் காரணம் மன்னனுக்குப் புரிந்தேயிருந்தது. சிங்கணன் சேரர் படைகளுக்குத் தலைமை தாங்கிச் சென்றதை சேனாதிபதி சற்றும் பொறுக்காததால், சமயம் கிடைத்த போதெல்லாம் அதைச் சுட்டிக் காட்டுகிறானென்பதைப்புரிந்து கொண்ட மன்னன் அதைப் பற்றி விளக்காமல், ''சரி சேனாதிபதி! குருநாதர் எங்காவது போகவேண்டுமென்றால் எனது ரதத்தையே அவருக்குக் கொடுத்துவிடும்,'' என்று மற்றொரு உத்தரவையும் பிறப்பித்து சேனாதிபதியை அனுப்பிவிட்டான்.

அந்த இரண்டாவது உத்தரவுக்கும் காரணத்தைப் புரிந்துகொண்ட சேனாதிபதி, 'குருநாதனுக்கு அரசன் சுதந்திரமளித்தாலும், படைகளை நடத்த அதிகாரமளித்தாலும், அவரை எப்பொழுதும் கண்காணிக்கவும் தனக்குக் கஷ்டமானபோது அவரைக் கை கால் அசைக்க வொட்டாமல் செய்யவும் ஏற்பாடு செய்கிறான்,' என்று தனக்குள் சொல்லிக்கொண்டே சென்றான். அப்படிச் சென்ற சேனாதிபதிக்கு ஒரு விஷயம் தெள்ளெனப் புரிந்திருந்தது. அரசன் அந்தச் சமயம் உள்ள விபரீத யுத்த நிலைமையால் ஏதோ தனக்குச் சாதகமாயிருக்கிறானே தவிர தனது நிலையும் திடமானதல்லவென்று உணர்ந்திருந்தான் சேனாதிபதி. மன்னனுக்கு எதிலும் உள்ள சந்தேகம் தனது நடவடிக்கைகளிடமும் இருக்குமென்பதில் சற்றும் ஐயமில்லாததால் அதிகமாகப் பொறுப்பைக் கழிக்காமலும் அதிகமாகப் பொறுப்பை ஏற்காமலும் நடப்பதுதான் விவேகமென்பதைப் புரிந்து கொண்டான் சேனாதிபதி. இருப்பினும் அரசன் பிறப்பித்த இரகசிய உத்தரவுகள் எந்தக் கஷ்டத்தில் தன்னைக் கொண்டுபோய் விடுமோ என்று திகைப்படைந்தான் அவன். அரசன் மிகத் தந்திரமாகச் செய்துள்ள ஏற்பாடுகளை குருநாதர் புரிந்து கொண்டால் ஏற்படக் கூடிய விபரீதம் அவனுக்குத் தெரிந்திருந்தது. குருநாதரும் அப்படி யொன்றும் ஏமாந்தவரல்லவென்பதை உணர்ந்திருந்த சேனாதிபதி அரசனுக்கும் குரு

சாண்டில்யன்



நாதருக்குமிடையில் தான் அகப்பட்டுக் கொண்டதை நினைத்துத் தனது விதியை நொந்து கொண்டான். ஆகையால் அந்தச் சிந்தனையிலும் கலக்கத்திலும் அச்சத்திலும் அன்று பொழுதைக் கழித்த சேனாதிபதிக்கு அடுத்த ஒரு வாரகாலம் மன நிம்மதி பெரிதும் ஏற்பட்டது.

மனநிம்மதி ஏற்பட்டது சேனாதிபதிக்கு மட்டுமல்ல, அரண்மனையில் வாழ்ந்த அனைவருக்குமே ஏற்பட்டது. மறுநாள் விடியற் காலையிலேயே எழுந்திருந்து காலைக் கடன்களையும் பூசையையும் முடித்துக்கொண்ட வீரரவி உதயமார்த்தாண்டவர்மன் முதலமைச்சரை வரவழைத்துத் தனது மந்திராலோசனை அறையில் சேனாதிபதி, கடற்படை தள்பதி, குருநாதர் ஆகியவர்களையும் மற்ற மந்திரிகளையும் கூட்டுமாறு உத்தரவிட்டான். அரசன் உத்தரவை நிறைவேற்றச் சென்ற முதலமைச்சர் சுமார் அரை ஜாமத்துக்கெல்லாம் மன்னனைச் சந்தித்து, ''அனைவரும் வந்துவிட்டார்கள். தங்களுக்காகக் காத்திருக்கிறார்கள்.'' என்று அறிவித்தார்.

முதலமைச்சர் தொடர காவலர் கட்டியங்கூற, பெண்களிருவர் முன்னால் மலர் தூவ, தனது மேலிருந்த சரிகைத் தகடி தரையில் புரள இடது கையில் வீரகங்கணம் பளபளக்க, நெற்றியில் தீட்டப்பட்டிருந்த சங்கு வடிவத் திலகம் போருக்கு அறைகூவ மந்திராலோசனை அறையில் நுழைந்த சேரர் பெருமானைக் கண்டதும் அனைவரும் எழுந்து சிரம் தாழ்த்தினர். அவர்களுக்குப் பதில் வணக்கம் செய்துதனது ஆசனத்திலமர்ந்த வீரரவி மந்திராலோசனை சபையைக் கண்டு பூரித்தான். சபையில் சுமார் பத்துப் பேர்கள் தானிருந்தார்களென்றாலும் அரசின் பத்துவித உறுப்புகளும் அவர்களில் விரிந்து நிற்பதை மன்னன் உணர்ந்தான். அந்தச் சபையிலிருந்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு பணியில் சிறந்தவர்களென்பதை உணர்ந்த வீரரவி அந்தச் சமயத்தில் பாண்டியனிடம் உள்ளூர இருந்த பயத்தைக்கூட உதறிவிட்டான். ஆகவே மற்றவர்களை அமரச் சொல்லிக் கையமர்த்தி சபை துவங்கலாமென்பதற்கு அறிகுறியாக முதலமைச்சர் மீது கண்களைத் திருப்பினான். முதலமைச்சர் அரசனுக்குப் பின்னால் வெள்ளி மந்திரதண்டங்களுடன் நின்றிருந்த விருது கூறுவோரை நோக்கினார். அடுத்த விநாடி விருது கூறுவோர் கைகளைத் தண்

---

## பாராட்டுவது எப்படி? தெரிந்து கொள்ளுங்கள்.

விஸ்லர் என்ற புகழ் பெற்ற அமெரிக்க ஓவியர் உற்சாகப் பிரியர். யாரும் எதையும் ஏனோதானோ என்று பாராட்டினால் அவருக்குப் பிடிப்பதில்லை. உணர்ச்சியோடு சொன்னால்தான் ஏற்றுக் கொள்வார்.

ஒருநாள் அவர் தீட்டி முடித்த ஒரு படத்தைத் தன் நண்பரிடம் காட்டி, ''எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

''அழகாய் இருக்கிறது.'' என்று பதில் வந்தது.

விஸ்லருக்குத் திருப்தி உண்டாகவில்லை. மறுபடி, ''எப்படி இருக்கிறது?'' என்றார்.

''அழகாய் இருக்கிறது,'' என்றார் நண்பர்.

விஸ்லருக்குக் கோபம் வந்துவிட்டது. குரலை உயர்த்தி, தொண்டை கிழிய, ''டாம்மிட்! எப்படி இருக்கிறது?'' என்று கத்தினார்.

நண்பரும் கத்தினார். ''டாம்மிட், அழகாய்த்தான் இருக்கிறது!''

விஸ்லர் திருப்தி அடைந்தார்!

டத்துடன் உயரக் கூப்பி சேரமன்னர் குல தெய்வச் செய்யுளை முணுமுணுத்தார்கள். பிறகு அரசரின் விருதுகளைக் கூறினார்கள். பிறகு அரசர் பின்னாலிருந்து விலகி அறை வாயிலை நோக்கிச் சென்றார்கள். அடுத்த நிமிடம் அறையின் பெருவாயிற் கதவுகள் சப்தமின்றிச் சாத்தப்பட்டன.

கதவுகள் மூடுவதற்கும் முதலமைச்சர் ஆசனத்தை விட்டு எழுவதற்கும் நேரம் சரியாயிருந்தது. "சேரர் குலச்செல்வர், வீரரவி உதயமார்த்தாண்டவர்மர் சபையில் கலந்து கொள்ள விரும்புகிறார். எதிரிகள் அணுக அஞ்சும் இப்பரலி மாநகரை பாண்டியன் படைகள் அணுக இருக்கின்றன. எதிரிக்கு அஞ்சும் நாடல்ல சேரநாடு. எதிரியைக் குறைத்து மதிப்பிடுவதும் இந்நாட்டு வழக்கமல்ல. எதிரி திறமைசாலி. தந்திரசாலியுங்கூட. அத்தகைய பாண்டிய சகோதரர்களை நாடு எதிர்க்க வேண்டியிருக்கிறது. அணுகி வரும் போரைக் கண்டு அஞ்சுவதோ பின்னடைவதோ இமயவரம்பன் குலத்தாரிடம் கிடையாது. அச்சம் என்பது சேரமக்கள் அறியாத சொல். ஆகவே போர்த் தந்திரங்களை நிர்ணயிக்க இந்தச் சபை கூடியிருக்கிறது." என்று கூறி அமர்ந்தார்.

மன்னனின் கூரிய விழிகள் எதிரே அமர்ந்திருந்த சபையினரை ஒரு விநாடி துழாவின. பிறகு அவன் உதடுகள் தெளிவாகவும் கம்பீரமாகவும் சொற்களை உதிர்த்தன. "நம் நாடு போரைக் கண்டு நாளாகிறது. காரணம், எந்த நாட்டுடனும் நாம் போரை நாடாததுதான். ஆனால் நாம் போரைக் கண்டு அஞ்சுவோமென்று எந்த நாடாவது நினைத்தால் அதைப்போல் அறிவற்ற நினைப்பு எதுவுமில்லை. பாண்டியர்மீது நாம் போர் தொடுக்கவில்லை. பாண்டியர் நம்மீது போர் தொடுத்திருக்கிறார்கள். பாண்டியன் மகளை நாம் கொணர்ந்ததற்காகப் போர் என்று கூறப்படுகிறது. பெண்களைக் கொணர்ந்துராக்ஷஸ விவாகம் புரிவது க்ஷத்திரிய தர்மம் என தர்ம சாத்திரம் கூறுகிறது. பெண்ணை நாம் கொணர்ந்தது உலகத்தின் கண்களில் தவறாகப் படலாம். ஆனால் தர்மத்தின் கண்களுக்கு அது தவறல்ல. தவிர, ஏன் பாண்டியன் பெண்ணைக் கொணர்ந்தோம்? பாண்டியன் ரகசியமாகப் போருக்குச் சித்தமாகிக் கொண்டிருந்தான். முத்துக் களவில் நமக்குச் சம்பந்தமிருப்பதாகப் புரட்டுகளைக் கிளப்பினான். அதை முன்விட்டு கொற்கைக்குத் தனது தம்பியையும்

---

## நகைசுவை எதுவோ?

திருமதிகள் எம். எஸ். ஸையும் எம். எல். வி. யையும் இப்படி ஜோடியாகச் சிரிக்கவைத்த நகைச்சுவை எதுவோ தெரியவில்லை. ஆனால் எந்த ஊரில் சிரித்தார்கள் என்பது மட்டும் தெரியும். பெங்களூர்.

'சங்கீத கலாநிதி' பட்டம் பெற்றநற்காகத் திருமதி எம். எஸ். சுப்புலட்சுமிக்கு பெங்களூரில் நடந்த பாராட்டு விழாவில்.

---

## உலகிலேயே ஒருவர்

எந்தப் பெரிய பிரமுகராக இருந்தாலும் கார் ஓட்டுவதற்கு லைசன்ஸ் கட்டாயம் இருக்கவேண்டும், ஆனால் இந்த உலகத்திலே ஒரே ஒருவர்மட்டும் லைசன்ஸ் ஏதுமின்றிக் கார் ஓட்ட அனுமதிக்கப்பட்டிருக்கிறார்! யார் அவர்? எலிஸபெத் ராணி!

-நல்லாசி-



**பதினேழும் பதினெட்டும்**

நடிகை விஜயஸ்ரீ சமீபத்தில் தமது 18'வது ஆண்டு பிறந்த நாளைக் கொண்டாடினர். ஆனால் போன வருடம் இவர் தன் பிறந்தநாளைக் கொண்டாட வில்லை. அவர் கூறிய காரணம்:

''போனவருடம் என் வயது 17. எண் சாத்திரப் படி (7+1) 8—ஐக் கண்டால் எனக்கு அலர்ஜி. இந்த ஆண்டு (1+8) 9ஆக இருப்பதால் கொண்டாடினேன்!''

கு.கு.

மகளையும் வேவுத்தொழில் புரிய அனுப்பினன். வேவுகாரர்களை, சேரர் மீது கண்காணிப்பவர்களை பிடிப்பதும் தண்டிப்பதும் நமது கடமையாயிற்று. அவ்விருவரையும் கொற்கையிலேயே பிடிக்கப் பார்த்தோம். தந்திரத்தால் தப்பி விட்டார்கள். பிறகு சேர நாட்டு எல்லையருகிலுள்ள கோட்டையில் ரகசியமாகத் தங்கிப் படை திரட்டினர்கள். அங்கு அவர்களைக் கண்காணித்து, நம் மீது வேவு பார்த்த அவர்கள் அரசகுமாரியைத் தந்திரத்தால் கொணர்ந்தோம். அப்பொழுதாவது பாண்டியர்கள் விரோத பாவத்தைக் கைவிட்டு சமரசத்தை நாடியிருந்தால், வேவு பார்ப்பதை நிறுத்திக்கொண்டிருந்தால், நாம்அமைதிக் கரத்தை அவர்களுக்கு நீட்டியிருப்போம். ஆனல் அவர்கள் நாடியது சமரசமல்ல. போர். உடனடியாகப் போர் தொடங்கினர்கள். நமது தலைநகருக்குள் ஒற்றர்களை அனுப்பினர்கள். இன்னும் பாண்டிய ஒற்றர்கள் இங்கு உலாவுகிருர்கள். இந்த நிலையில் நாம் இத்தலைநகரைக் காப்பதைத் தவிர வேறு வழியில்லை. நமது கடற்படையில் பத்துப் போர்க்கப்பல்களை எதிரிகள் அழித்திருக்கிருர்கள். போரில்லல, திருடன் வீட்டைக் கொளுத்துவதுபோல் கள்ளத்தனமாகக் கொளுத்தி யிருக்கிருர்கள்,'' என்ற மன்னன் சிறிது நிதானித்தான்.

சபையில் சிறிது சலசலப்பு ஏற்பட்டது. ஆங்காரத் தொனி கிளம்பின. அவற்றைக் கவனித்தும் கவனிக்காதது போல மன்னன் மேலும் சொன்னன்: ''சேரநாடு யானைகள் பெருத்த நாடு. யானை சாதுவானது. ஆனல் அதனுடன் விளையாடுவது ஆபத்து. நிதானமாக இயங்குவது அதன் சுபாவம். ஆனல் நிதானம் மீறிவிட்டால் அதன் வேகத்துக்கும் கோபத்துக்கும் இணை கொடுக்க யாராலும் முடியாது. யானையைப் பாண்டியன் தூண்டுகிருன். அது இப்பொழுது சீற ஆரம்பித்துவிட்டது. இருப்பினும் அது நிதானத்தையும் தர்மத்தையும் இழக்க விரும்பவில்லை. ஆகவே முதலில் இந்தப் போரின் அஸ்திவாரத்தைத் தகர்க்க விரும்புகிறது.''

அரசன் மனத்தில் உதித்திருப்பது என்ன என்பது புரியாததால் மந்திரிகள் அவனைச் சற்றுக் குழப்பத்துடன் நோக்கினர்.

மன்னன் விளக்கினுன் மெல்ல;

''பாண்டியன் மகளை நாம் கொணர்ந்தது தவறு, சிறை வைத்திருப்பது தவறு என்று பாண்டியன் கூறுகிறான். வேவுகாரர்களைப் பிடிப்பதோ சிறை வைப்பதோ தவறில்லை யென்பது என் கருத்தானாலும் குருநாதர் கருத்து வேறுவிதமாயிருக்கிறது. அது அதர்மம், என்று நினைக்கிறார் குருநாதர். ஆகவே பாண்டியன் மகளை இன்று முதல் அவரிடம் ஒப்படைத்துவிடுகிறேன். தவிர, இன்றுள்ள போர் நிலையை சமாளிப் பதிலும் அவர் யோசனைப்படி நடக்கத் தீர்மானித்திருக்கிறேன். இன்று முதல் படைகள் அவர் உத்தரவுப்படி இயங் கும்,'' என்றான் மன்னன்.

முதலமைச்சர், குருநாதன் சேனாதிபதி இம்மூவரைத் தவிர மற்றவர் முகங்களில் வியப்பு விரிந்தது. அந்த வியப்புடன் சற்றுக் கோபமும் கொண்ட கடற்படைத் தளபதி ஆசனத்திலிருந்து எழுந்து, ''குருநாதருக்குக் கடற்படைப் பயிற்சி உண்டா? போர்க்கப்பல்களை நடத் தத் தெரியுமா?'' என்று வினவினான்.

மன்னன் பதிலுக்குக் குரு நாதனை நோக்கினான். குருநாதனின் சின்னஞ்சிறு விழிகள் கடற்படைத் தலைவனை அலட்சியத்துடன் நோக்கின. ''உமக்கு அவற்றில் பரிச்சயமுண்டு போலிருக்கிறது?'' என்று வினவினார் விஷமமாக.

''உண்டு. சின்னஞ்சிறு வயது முதற்கொண்டே கடலோடியிருக்கிறேன். இருபது ஆண்டுகளாகக் கடற்படைத் தளபதியாயிருக்கிறேன்,'' என்றான் கடற்படைத் தளபதி.

''இருந்து நீர் சாதித்தது என்னவோ?'' குருநாதன் குரலில் உணர்ச்சி ஏதும் தெரியவில்லை. ஆனால் கண்கள் விஷமத்தைச் சொட்டின.

''சாதனைக்குப் பட்டியல் தர அவசியமல்ல,'' என்ற கடற்படை தலைவன் குரலில் சீற்றமிருந்தது.

''காரணம் தர அவசிய மிருக்கிறது.''

''எதற்கு?''

''பத்துப் போர்க் கப்பல்கள் எரிந்து போனதற்கு.''

''எதிர்பாராது நடந்தது.''

''அதில்தான் [illegible]திகக் குற்ற மிருக்கிறது.''

''நீங்கள் சொல்வது புரிய வில்லை.''

''எதிரிக் கப்பல்கள் உமது படை மீது மோதி கப்பல்கள் எரிந்திருந் தால் அது போர் நஷ்டக் கணக்கு. எந்த எதிர்ப்பும் இல்லாதபோது எரிந்திருந்தால் அது கடற்படைத் தலைவன் அஜாக்கிரதை. அசிரத்தை. அஜாக்கிரதை மன்னிக்கத் தகுந்த குற்றமல்ல.''

கடற்படைத் தலைவன் கண்கள் நெருப்பைக் கக்கின. ''நான் கலைத்துறையில் இல்லை. இது நடனமாடும் வேலையுமல்ல,'' என்றார் மூர்க்கத்தனமாக.

''உண்மை. கலைக்கும் உமக்கும் சம்பந்தமில்லை,'' என்றான் குருநாதன்.

''இப்பொழுது புரிகிறதா உமக்கு?'' என்று வினவினான் கடற்படை தலைவன்.

''புரிகிறது. நன்றாகப் புரி கிறது.

''என்ன புரிகிறது?'' என்று வின் வினான் கடற்படைத் தலைவன்.

''எந்தக் கலைக்கும் உனக்கும் சம்பந்தமில்லையென்று. போரும் ஒருகலை,'' என்று குருநாதன் விஷமப் புன்முறுவல் கோட்டினான்.

இந்தச் சொற்போரை நீடிக்க விடாத மன்னன் இடைபுகுந்து, ''நமக்குள் சண்டையிட இப்பொழுது அவகாசமில்லை. தலைநகரை எதிர்நோக்கி வரும் பகைவனைச் சமாளிக்கும் வழியைப் பற்றி யோசிப் போம். முதலில் குருநாதர் யோசனை கூறட்டும்,'' என்றான்.

குருநாதன் ஆசனத்தைவிட்டு எழுந்திருக்கவில்லை. உடனடியாக யோசனையும் கூறவில்லை. தீர்க்காலோசனை யில் இறங்கி நீண்டநேரம் மௌனம் சாதித்தான். அந்த மௌனம் உடைந்த போது சொற்கள் உதிர்ந்தன. தனது போர்த் திட்டத்தை மெள்ள மெள்ள விவரித்தான் பரதபட்டன். அந்தத் திட்டம் விரிய விரிய மன்னன் விழிகளும் மந்திரியின் விழிகளும், படைத்தலைவர்கள் விழிகளும் வியப்பால் மலர்ந்தன. ஒரு கட்டத்தில் அவர்கள் நெஞ்சம் கூடத் திடுக்கிட்டது. நெஞ்சம் அஞ்சும் திட் டத்தைத் தீட்டினான் பட்டன் அவர்கள் மனக்கண்களுக்கெதிரே.

(தொடரும்)

# சபாஷ், பால பத்ர திவாரி !

அரசாங்கத்தில் பல உத்தியோகங்களைத் தேடிப் போகிற இளைஞர்கள், தேர்வுக் குழுவைச் சந்தித்துப் பேட்டிப் பரீட்சையில் தேற வேண்டியிருக்கிறது. பேட்டியின்போது விண்ணப்பதார் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கு 'காம்பெடிஷன் மாஸ்டர்' பத்திரிகை உதாரணமாகக் காட்டியிருக்கிறது பால பத்ர திவாரி என்பவரை.

(இளைஞர் உயரமான, கட்டுமஸ்தான உடல் படைத்தவர்; எளிய உடை. நிமிர்ந்து, நிதான நடையில், பார்வையை நேரே செலுத்தி நடக்கிறார். ஒப்புக்கான புன்னகை அவர் முகத்தில் இல்லை. உள்ளிருக்கும் போராட்டத்தை அது சற்றுக் காட்டிக் கொடுக்கிறது. எனினும், நாணயமான, ஒளிவு மறைவில்லாத, சிநேகபாவமான தோற்றத்தையும் அது காட்டுகிறது. ஆகவே, முகம் இன்னும் அழகானதாகத் தென்படுகிறது.)

இளைஞர்: (தலைவரின் கண்களை நேரடியாகச் சந்தித்து): குட் மார்னிங், சார்.

-தேர்வுக்குழு உறுப்பினர்: (புன்னகையுடன்): குட் மார்னிங், மிஸ்டர் திவாரி. (நாற்காலியில் அமரும்படி சைகை காட்டி) வசதியாக உட்காருங்கள்.

இளைஞர்: நன்றி சார். (நாற்காலியில் அமர்கிறார்.)

உங்கள் முழுப்பெயர் என்ன, மிஸ்டர் திவாரி?

பால் பத்ர திவாரி.

நீங்கள் ஒரு சட்டப் பட்டதாரி, இல்லையா மிஸ்டர் பால் பத்ர திவாரி?

ஆம், சார்.

ஆனால் பொதுவாக சட்டப் பட்டதாரிகள் அவ்வளவு திடகாத்திரர்களாக இருப்பதில்லை.

அப்படி இருக்கக்கூடாது என்று சட்டமெதுவும் கிடையாது.

[உறுப்பினர்கள் புன்னகை செய்கிறார்கள்.]

படிப்பில்லாத துறைகளிலும் நீங்கள் பங்கெடுத்துக் கொண்டதுண்டா?

ஆம். கல்லூரி மல்லர்கள் குழுவுக்கு நான் கேப்டனாக இருந்தேன்.

எதுவும் தெரியவில்லை என்று அஞ்சுகிறேன்.

(ஒரு குறும்புச் சிரிப்புடன்): இந்தியாவிலேயே மிக அதிக எண்ணிக்கையில் கழுதைகள் இருப்பது அங்கேதான்.?

இருக்கலாம். ஆனால் நான் சொன்னபடி நான் அக்கறை கொண்ட துறைகளே வேறு.

உங்கள் முதல் சாய்ஸாக இந்திய போலீஸ் சர்விஸைக் குறிப்பிட்டிருக்கிறீர்களே?

ஆம் சார்.

போலீஸ் சர்விஸைத் தேர்ந்தெடுப்பதற்கு ஏதேனும் குறிப்பிட்ட காரணம் உண்டா?

அது என் இதயத்தைக் கவர்ந்த தொழில்.

போலீஸ் சர்விஸைத் தேர்ந்தெடுத்ததில் உங்கள் நோக்கம் அல்லது நோக்கங்கள் என்ன?

என் ஆசையை நிறைவேற்றிக் கொள்வது..

அதுதான் வெளிப்படையாய்த் தெரிகிறது! (சிரிப்பு) ஆனால், நான் கேட்பது, நீங்கள் கலை நிகழ்ச்சிகள் பட்டி மன்றம் முதலிய நடவடிக்கைகளில் ஈடுபட்டது உண்டா என்றுதான்.

இல்லே சார்.

ஒருவேளை நாலு பேருடன் கலந்து பழகுவது உங்களுக்குப் பிடிக்காதோ?

ஒரே சமயத்தில் பல வேலைகளைக் கவனிப்பதில் எனக்கு நம்பிக்கை கிடையாது.

உங்கள் சொந்த ஊர் எது?

உத்தர் பிரதேசத்தில் கோண்டாவைச் சேர்ந்தவன் நான்.

உத்தர் பி ர தேசத்தைப் பற்றி நீங்கள் சில விஷயங்கள் சொல்லமுடியுமா?

முடியும். இந்திய யூனியனில் அதுதான் மிகப் பெரிய ராஜ்யம்.

அவ்வளவுதானு?

அந்த ராஜ்யத்தைப் பற்றி நீங்கள் கேட்கும் எந்தக் கேள்விக்கும் விடை கூற முயலுவேன்.

உங்கள் ராஜ்யத்துக்கு இன்னெரு பெருமையும் உண்டு என்று உங்களுக்குத் தெரியுமா?



உங்கள் தேசத்துக்காக ஏதேனும் செய்ய வேண்டுமென்று உங்களுக்கு ஆர்வம் கிடையாதா?

அதற்குத்தானே நான் இங்கே வந்திருக்கிறேன்.

நீங்கள் தவறுமல் செய்திதாள்கள் படிப்பதுண்டா?

ஆம். நான் டைம்ஸ் அஃப் இந்தியாவின் சந்தாதார்.

புத்தாண்டுக்கு முந்தின நாள், புது டெல்லி கனுட் பிளேஸில் சில கேளிக்கைக்காரர்கள் ஏற்படுத்திய கலாட்டாக்களைப் பற்றிப் படித்தது நினைவிருக்கிறதா உங்களுக்கு?

(சற்று யோசித்தபின்): ஆம். அதை நினைவு படுத்திக் கொள்ள முடியும் என்று நினைக்கிறேன்.

அந்தச் சமயத்தில் அந்தப் பகுதியில் டியூட்டியில் இருந்த போலீஸ் அதிகாரிகள் தங்கள் கடமையைச் செய்யத் தவறியதற்காகக் கண்டிக்கப்பட்டார்கள் என்பதையும் படித்திருப்பீர்கள்?

# பேட்டி என்றல் இதுவல்லவா பேட்டி

ஆமாம். சார்.

அப்படிப்பட்ட ஒரு கலாட்டாவை நீங்கள் எதிர்நோக்க நேர்ந்திருந்தால் என்ன நடவடிக்கை மேற்கொண்டிருப்பீர்கள்?

அப்படிப்பட்ட சம்பவங்கள் நிகழா வண்ணம் தடுக்க என்னால் முடிந்ததைச் செய்திருப்பேன்.

அது சரி. ஆனால் என்ன விதத்தில்?

உண்மையாகவே அப்படிப்பட்ட நிலைமையில் நான் இருந்தாலொழிய, அதைப் பற்றி நான் ஏதும் கூற முடியாது என்று அஞ்சுகிறேன்.

ஒரு குண்டர் கும்பலைச் சமாளிக்கும்படி உத்தரவிடப்பட்டுள்ள ஒரு போலிஸ் அதிகாரியாக உங்களைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். நிலைமையை எப்படிச் சமாளிப்பீர்கள்? கண்ணீர்ப் புகையைப் பயன்படுத்துவீர்களா?

(சிறிது நேரத்துக்குப் பின்): கேந்திரமான இடங்களைக் கண்காணிக்கும்படி என் ஆட்கள் சிலரை நியமிப்பேன். விஷமிகளை அந்த இடத்திலேயே அடக்கும்படி சிலரை ரோந்து அனுப்பிவேன்.

கண்ணீர் புகை கூடாதா?

ஜனங்களைத் துன்புறுத்தும் குண்டா கும்பல் பலவாறு சிதறியிருக்குமாதலால் கண்ணீர்ப் புகையைப் பயன்படுத்த இயலாதிருக்கலாம்.

'தர்ட் டிகிரி' வழிமுறை என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?

சந்தேகாஸ்பதமானவர்களையும் குற்றம் சாட்டப்பட்டவர்களையும் ஒப்புக்கொள்ள வைப்பதற்காக, அவர்களுடைய உடலைத் துன்புறுத்தும் முறையை அது குறிக்கும்.

அந்தகைய முறைகளைப் பயன்படுத்த வேண்டும் என்று நீங்கள் கருதுகிறீர்களா?

குற்றத்திலேயே ஊறித் தடித்துப் போன கிரிமினல்களின் விஷயத்தில், சாதாரண முறைகள் பலிக்காதிருக்கலாம்.

போலீஸ் சர்வீஸைத் தொழிலாக ஏற்றுக்கொள்ளும் மனிதன், ஆயுள் பூரா கிரிமினல்களுடனேயே பழக நேரிடுவதால், அவனுடைய மென்மையான உணர்வுகள் போய்விடும் என்று நீங்கள் நினைக்கவில்லையா?

அப்படிப்பட்ட அச்சங்கள் எனக்கு இல்லை, சார்.

இது போதும், மிஸ்டர் திவாரி.நன்றி.

(ஆசனத்தில் எழுந்து நின்று) நன்றி, சார். (வெளியேறுகிறார்.)

## மாஜிக் பாஷா



# வாழ்வில் முன்னேற விரும்பும் இளைஞர்களில் நீங்களும் ஒருவரா?

முன்னேற விரும்புவோர்க்கு வாழ்வே ஒரு எதிர்நீச்சல்.
அதைச் சமாளிக்க இணையற்ற ஆர்வம், ஈடில்லாமுயற்சி,
உத்வேகம் முதலியன உறுதுணை நிற்கும்.
இவை ஒருங்கிணைந்த இளைஞரா நீங்கள்?
அப்படியானால் உங்களுக்கேற்ற சைக்கிள் பிலிப்ஸ்
உங்கள் துடிப்புமிகு தன்னம்பிக்கை, உறுதிமிகு ஆர்வம்,
இவற்றை அப்படியே பிரதிபலிக்கிறது பிலிப்ஸ் சைக்கிள்.
உயரிய எஃகினால் நுண்ணிய வேலைப்பாட்டுடன்
உருவாக்கப்படும் பிலிப்ஸ் உறுதியில் தன்னிகரற்றது.
சவாரிக்கு சுகமானது, தோற்றத்தில் எடுப்பானது.

வெற்றிப்பாதையில்
வேகமாக முன்னேற

## பிலிப்ஸ்®
## சைக்கிள்





இந்தியாவில் தயாரிப்போர் டியூ சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா,
அம்பத்தூர், சென்னை-53
உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்
சென்னை-1 பதிவுபெற்று உபயோகிப்போர்
®J.A. பிலிப்ஸ் கம்பெனி லிமிடெட், யு.கேயின் பதிவுபெற்ற டிரேட்மார்க்குகள்

TIC-PH-[illegible]

# தம்பி வளர்த்த கடாரி

**- பெ. தூரன்**



“அக்கா, அக்கா, இங்கே ஓடிவந்து பாரு, நான் வந்தவுடனே முத்துக்குட்டி சிரிக்குது பாரு. அவனுக்கு என்னைக் கண்டால் அத்தனை பிரியம். வா, வா, வந்து பாரு,” என்று தங்கமணி ஒரே குதூகலமாகத் தன் அக்காள் செல்லம்மாளைக் கூப்பிட்டான். மாலையில் பள்ளி முடிந்தபிறகு அப்பொழுதுதான் அவன் வீடு திரும்பியிருக்கிறான். வந்ததும் அவனுக்கு முதல்வேலை தொட்டிலில் படுத்துக்கொண்டிருக்கின்ற மூன்று மாதக் குழந்தை முத்துவைப் பார்ப்பதே ஆகும்.

செல்லம்மாள் முதல் பிரசவத்திற்காகத் தன் பிறந்த வீட்டிற்கு வந்திருந்தாள். கந்தப்பகவுண்டனூரில் வாழ்பவர்களெல்லாம் விவசாயிகள். ஏராளமான நிலபுலன்கள் உள்ளவர்கள் அந்த ஊரிலே யாருமில்லை. எல்லாரும் சிறுகுடித்தனக்காரர்களாகவே இருந்தார்கள். சின்னுசாமிக் கவுண்டர்தான் கொஞ்சம் அதிகமான சொத்து உடையவர். அவர்தான் அந்த ஊர்ப் பெரிய தனக்காரர்.

இப்பொழுது அவருடைய குடும்பமும் எதிர்பாராத செயல்களினால் கடனுக்குள் மூழ்கிக்கொண்டிருந்தது. அவருடைய ஒரே மகள்தான் செல்லம்மாள். தங்கமணி, செல்லம்மாளின் தம்பி. அவனுக்கு வயது சுமார் பதினான்கு இருக்கும். இக்காலத்தில் இலவசமாகவே கல்வி கற்பதற்கு அரசாங்கம் வசதி செய்திருப்பதுடன் ஏராளமான உயர்நிலைப் பள்ளிகளைத் தொடங்கியிருக்கிறதல்லவா? அதனால் எட்டாம் படிவத்தில் படித்துக் கொண்டிருந்தான் தங்கமணி.

சின்னுசாமிக் கவுண்டரின் மனைவி சில ஆண்டுகளுக்கு முன்பு வைசூரிநோய்க்கு பலியாகிவி ட்டாள்.

கடன் ஏறிக்கொண்டு வருவதை நினைத்தும் தாயில்லாத விட்டிலே தனக்கு உதவி செய்வாரில்லாமல் சிரமப்பட வேண்டியிருக்கும் என்பதை எண்ணியும், செல்லம்மாள் முதலில் கந்தப்பகவுண்டனூருக்கு வர மனமில்லாமலிருந்தாள். ஆனால் சின்னுசாமிக் கவுண்டர் அவளை விட்டுவிடவில்லை. முதல் பிரசவம் பெண்ணின் பிறந்த வீட்டில்தான் நடக்கவேண்டும் என்ற சம்பிரதாயத்தை அவர் பெரிதாக எண்ணினார். மேலும் அவர் அழைத்து வராவிட்டால் ஊரார் ஏதேதோ பேசுவார்கள். இதுவே அவர் செல்லம்மாளை அவள் கணவன் வீட்டிலிருந்து அழைத்து வந்ததற்கு முக்கிய காரணம்.

தங்கமணியின் குரல் கேட்டவுடனே சமையல் அறையிலிருந்து செல்லம்மாள் மலர்ந்த முகத்துடனே தொட்டிலை நோக்கி



**வைர மோதிரக் கதை**

வந்தாள். குழந்தைக்குச் செல்லமுத்து என்று உரிய காலத்தில் முன்பே பெயரிட்டிருந்தார்கள். தங்க மணி குழந்தையை 'முத்துக்குட்டி' என்று செல்லமாக அழைப்பான். அப்படிச் சொல்லியே செல்லம்மாளுக்கும் பழக்க மாகிவிட்டது.

"அக்கா, முத்துக்குட்டி என்னையே பார்க்கிறான். நீ வந்ததைக்கூட அவன் கவனிக்கவில்லை. மாமாவைப் பார்க்க அவனுக்கு அத்தனை ஆசை. அக்கா, முத்துக்குட்டி என்னை, 'மாமா, மாமா' என்றுதானே கூப்பிடுவான்?"

"ஆமாம், ஆமாம். ....அவனைப் பார், ஆமா என் று சொல்லுவதைப் போலச் சிரிக்கிறான்."

"அக்கா, முத்துக்குட்டி இப்போ பால் குடிச்சுதா? நம்ம மயிலைக்



கடாரி அவனுக்குத்தான். அந்தக் கடாரியை எத்தனையோ நாள் நான்தான் மேயவிட்டு வளர்த்தேன்.''

''அதனால்தான் பால் ரொம்ப ருசியா இருக்குது. அந்தக் கடாரியை நீயே வச்சுக்கோ.''

''எனக்கு வேண்டாம். முத்துக் குட்டிக்குத்தான் நான் அத்தனை அருமையாக வளர்த்தேன். காலையிலே பள்ளிக்கூடம் போவதற்கு முன்னாலே, நான் சுமக்கும் அளவுக்குக் காட்டிலிருந்து பச்சைப்புல் பிடுங்கி வந்துப் போட்டுட்டுத்தான் போவேன்.'' தங்கமணி இதைப் பெருமகிழ்ச்சியோடு கூறினான்.

''அதுக்குத்தான் சொல்றேன். இந்த இளங்கடாரி உன்னைப் பார்க்கா விட்டால் ஏங்கிப்போகும். தீனியே தின்னாது,'' என்றாள் செல்லம்மாள்.

''அக்கா, அதெல்லாம் இல்லை. நான் அடிக்கடி முத்துக்குட்டியைப் பார்க்க உங்க ஊருக்கு வருவேன். அப்போ, இந்தக் கடாரியை உடம்பெல்லாம் தேய்த்து நீவிக் கொடுப்பேன். அதுவே அதற்குப் போதும்.... அக்கா, முத்துக் குட்டி பால் கேக்குது.''

''இல்லை, அவன் பால் கேட்கவில்லை. நீயும் அவனோடு எங்க ஊருக்கு வரவேண்டுமாம். அதைத்தான் சொல்றான்.''

செல்லம்மாள் ஒரு குழந்தைக்குத் தாயாகிவிட்டாள். தங்கமணி எட்டாம் படிவத்தில் படிக்கிறான். ஆனால் அவர்கள் இருவரும் பேச ஆரம்பித்தார்களானால் குழந்தைகளே ஆகிவிடுவார்கள். இருவருக்கும் நான்கு ஆண்டுகள்தான் வயதிலே வித்தியாசம். இருவரும் சேர்ந்திருக்கும்போது அவர்கள் விளையாட்டுப் பிள்ளைகளாகவே மாறிவிடுவது பார்ப்பவர்களுக்கு வியப்பாக இருக்கும். அதிலும் தந்தை சின்னுசாமிக் கவுண்டரின் நடத்தை விபரீதமாகப் போகத் தொடங்கவே அவர்களிடம் அன்புசெலுத்த அந்த வீட்டில் யாருமில்லை. தன் தம்பியின் உள்ளம் சோர்ந்துவிடக் கூடாது என்பதற்காக செல்லம்மாள் மிகவும் எச்சரிக்கையாக இருந்தாள்.

சின்னுசாமிக் கவுண்டர் மிக நல்லவர் என்றுதான் பெயரெடுத்திருந்தார். ஆனால் மனைவியை இழந்த பிறகு அவருக்கு எப்படியோ வாழ்க்கையில் உற்சாகம் குறைந்துவிட்டது. தன் மகனிடத்திலும் மகளிடத்திலும் மிகுந்த பற்றுடையவர் என்றாலும் அப்பற்று மட்டும் அவர் உள்ளத்திற்கு நிறைவு கொடுப்பதாக இருக்கவில்லை. அதனால் மற்றவர்களோடு சேர்ந்துகொண்டு மது பானத்தைக் கையில் தொட ஆரம்பித்தார். இந்த மது என்ற பேய் பிடித்துக் கொண்டால் அது எவ்வளவு தூரத்திற்கு மனிதனைக் கீழ்நிலைக்குக் கொண்டு வந்துவிடும் என்பதற்குச் சின்னுசாமிக்கவுண்டரே நல்ல எடுத்துக்காட்டு என்று சொல்லலாம்.

தமிழகத்திலே மதுவிலக்கு அமலில் இருப்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் பக்கத்து மாநிலங்களிலே மது விலக்கு ரத்து செய்யப்பட்டு விட்டதால் அங்கிருந்து தமிழகத்திற்குள்ளே மது வந்து சேருவதற்கு வசதிகள் ஏற்பட்டுவிட்டன. எத்தனையோ கட்டுதிட்டங்கள், காவல்கள் ஏற்பட்ட பிறகும் மது விற்கும் கள்ளச் சந்தையை ஒழிக்க முடியவில்லை. கள்ளச் சாராயம் காய்ச்சுவதற்கும் மாநிலத்தின் எல்லைப் பகுதிகள் நல்லப் பாதுகாப்பான கோட்டைகளாக அமைந்துவிட்டன. சாராய வருவாயிலே மாமூல்கள், பங்குப் பிரிவினைகள், சதவிதங்கள் எல்லாம் திட்டவட்டமாக அமைந்துவிட்டன. கள்ளச் சந்தைக்கும் வருவாய்; காவலுக்கும் வருவாய். பிறகு கேட்பானேன்?

இந்த நிலையிலே கேரள மாநிலத்தின் எல்லைக்கு இரண்டு மைல் தொலை

வில் இருந்த கந்தப்பகவுண்டனூரில் குடிப் பழக்கம் பெருகிக்கொண்டே வந்ததில் வியப்பில்லை. சின்னுசாமிக் கவுண்டர் கள்ளச்சாராய வலையிலே நன்றாகச் சிக்கிக் கொண்டார். அதைவிட்டு மீளவேண்டு மென்ற எண்ணமே அவருக்கு இல்லாமற் போய்விட்டது. பண்ணை வருமானமெல் லாம் கள்ளச்சந்தையில் ஒன்றுக்குப் பந் தாகக் கரையலாயிற்று. நாணயமுள்ளவ ராக இருந்த அவர் கிடைக்கக்கூடிய இடங்களிலெல்லாம் கடன் வாங்கலானார். ஆனால் கடன் கொடுப்பவர்களும் ஓர் அளவிற்குமேல் தருவார்களா?

இந்தவிதமான நிலைமை ஏற் பட்டிருப்பதை அறிந்துதான் செல்லம் மாளின் கணவனுக்கு அவளைப் பிறந்த விட்டிற்கு அனுப்ப விருப்பமில்லை. செல் லம்மாளுக்கே வர அவ்வளவு ஆர்வமில்லை. என்றாலும் தம்பி தங்கமணியை நினைத்து அவள் வருவதற்கு உடன்பட்டாள்; கண வனுக்கு எப்படியோ சமாதானம் கூறி னாள்.

''மாமன் போகிற போக்கே எனக்குப் பிடிக்கவில்லை. நீ எதற்கு அங்கு போகவேண்டுமென்கிறாய்?'' இது செல்லம் மாளின் கணவனுடைய கேள்வி. ''தங்க மணி பொக்கென்று போய்விடுவான். அவனுக்காகத்தான் போகிறேன். அவன் ஒரு கடாரியை ரொம்பப் பிரியமாக வளர்த்துக் கொண்டிருக்கிறான். நம் குழந் தைக்குப் பாலுக்காக என்று சொல்லிக் கொண்டிருக்கிறானும்.'' இதைச் சொல்லி விட்டுச் செல்லம்மாள் சிறிதுநாணத்தோடு தரையைப் பார்த்த வண்ணம் நின்றாள். கருப்பமாக இருக்கும் செல்லம்மாளின் விருப்பத்திற்கு எதிராக மேற்கொண்டு யாரும் தடைசொல்லவில்லை.

செல்லம்மாளுக்குத் தன் தகப் பன் வீட்டிலே உதவிக்காக யாருமில்லை. சமையலுக்காக வைக்கப்படும் ஆட்களில் யாரும் ஒரு மாதங்கூட அங்கே நிலைப்பது அரிதாகிவிட்டது. ஆனால் சின்னுசாமிக் கவுண்டருக்கும் அவர் மகன் தங்கமணிக் கும் யாராவது சமைத்துத்தானே ஆக வேண்டும்? அதற்காக அவர் சமையல் தெரிந்த ஆள்களை ஒருவர் போனால் மற் றொருவராக வைக்க வேண்டியதாயிற்று. காலையிலெல்லாம் அவர் சாதுவாகத்தான் இருப்பார். ஆனால் இரவு நேரங்களில் தான் வேலைக்காரர்கள் பெருந்தொல்லைப் பட்டார்கள்.

''டேய், முனியா, இப்போ எனக்குப் பிரியாணி உடனே வேண்டும்,'' என்பார். அந்த நேரத்திலே அவன் தயார் செய்ய முடியுமா? பட்டணமாக இருந் தாலும் கடையிலே வாங்கிவந்து விட லாம்.

''வீட்டிலே சாமான்கள் இல்லை. நாளைக்குக் கண்டிப்பாக செய்கிறேன்,'' என்பான் முனியன்.

''வீட்டில் ஏன் சாமானில்லை?'' என்று உறுமுவார் சின்னுசாமிக் கவுண் டர்.

முனியன் மேலும் அவரோடு பேச்சுக் கொடுக்க முடியுமா? கொடுத் தால் குடிவெறியிலே அவர் தடியால் அடிக்கவும் தயங்கமாட்டார். அதனால் அவன் மௌனமாக அவருடைய வசவு களையெல்லாம் கேட்டுக் கொண்டிருப் பான். முனியன்தான் அவர் வீட்டிலே இரண்டு மாதத்திற்கு மேலாகவும் வேலை செய்தவன். ஊர்ப் பெரியதனக்காரரே இந்த நிலைமைக்கு வந்துவிட்டதனால் அவருக்கு எடுத்துச் சொல்லுவார் யாரு மில்லாமற் போயிற்று.

நல்லவேளையாக சின்னுசாமிக் கவுண்டருடைய இரவு ஆர்ப்பாட்டங்கள் அதிகமாகத் தங்கமணிக்குத் தெரிவ தில்லை. அவன் பள்ளியிலிருந்து மாலையில் வந்ததும் தான அன்போடு வளர்த்துக் கொண்டிருந்த கடாரியைக் கவனித்து விட்டு வீட்டிற்கு வருவான். நீண்ட நேரம் இரவில் படிக்கும் வழக்கத்தை அவன் வைத்துக்கொண்டிருக்கவில்லை. உணவருந்திவிட்டுத் தனக்காக ஒதுக்கி





விடப்பட்டிருந்த ஓர் தனி அறையிலே படுத்து உறங்கச் சென்றுவிடுவான்.

என்ன இருந்தாலும் சின்னு சாமிக் கவுண்டருடைய போக்கு அவனுக்கு ஓரளவாவது தெரியாமலிருக்குமா? ஜாடைமாடையாக மற்றவர்களும் அவனிடத்திலே அவன் தந்தையைப் பற்றிக் கூறுவார்கள்.

''தங்கமணி, நீ நம்ம ஊருக்குப் பெரியதனக்காரனுக வேண்டும். அப்பத்தான் எங்களுக்கெல்லாம் சந்தோசமா இருக்கும்,'' என்று இந்தமாதிரி பலர் அவனிடம் சொல்லியதுண்டு.

''ஏன், அப்பாதான் இருக்கிருரே, நான் அவரைவிடவா மேல்?'' என்று தங்கமணி சட்டென்று கேட்டுவிடுவான்.

பேச்செடுத்தவர்கள் மலைத்துப் போவார்கள். பிறகு சமாளித்துக் கொண்டு, ''அப்பா இருக்கிருங்க. அது மெய்தான். இருந்தாலும் நீ படிச்சவன். உன்னைப் போலப் படிச்சவங்க வந்தா ரொம்ப நல்லா இருக்கும் என்றுதான் சொன்னேன். வேறென்றும் இல்லை,'' என்று மழுப்பி இழுத்தாற்போல் பதில் சொல்லி முடித்துவிட்டுப் பேச்சை வேறு விதமாகத் திருப்பிவிடுவார்கள்.

சிறுவனுக இருந்தபோதிலும் தங்கமணிக்கு அவர்கள் கூறுவதின் உட்கிடை விளங்காமற் போகவில்லை. ஊர்ப் பெரியதனக்காரர் என்ற முறையில் தன் தந்தையிடம் கொண்டுவரப்பட்ட விவகாரங்களை நேர்மையான முறையில் தீர்த்துவைத்ததற்காகவும், அவருடைய வாழ்க்கையின் ஒழுக்கத்திற்காகவும், மக்கள் அவரிடம் முன்பெல்லாம் மிகுந்த மதிப்பு வைத்திருந்தார்கள். குடிப்பழக்கம் ஏற்பட்ட பிறகு அந்த மதிப்பு நாளுக்கு நாள் மங்கிவருவதையும் தங்கமணி உணராமல் இல்லை. கடன் ஏறிக்கொண்டே வருவதையும், பண்ணையைக் கவனிப்பதிலே அக்கறை குறைந்துவிட்டதால் வருவாயும் முன்போல வராமலிருப்பதையும் அவன் தெரிந்திருந்தான். பண்ணையில் ஆட்களும் தந்தையின் குடிவெறிக் கோபத்திற்கு இலக்காகி விலகிக்கொள்ள விரும்புவதையும் அவன் கவனித்தான். இந்த நிலைமை அவனுக்கு உள்ளத்தில் இயல்பாக அமைந்திருந்த குதூகலத் தன்மையைக் கலக்கலாயிற்று.



''இப்ப என் மனைவிக்கு ஆரும் மாதம். பிரசவம் ஏப்ரல் முதல் தேதி முட்டாள்தினத்தன்று நடந்துவிடுமோ என்று பயமாக இருக்கிறது. அதற்கு முன்னேயோ, பின்னேயோ பிறக்க ஏதாவது ஏற்பாடு செய்ய முடியுமா?''

ஒரு தடவை இந்தக் கலக்கம் உச்சநிலைக்குச் சென்றுவிட்டது. உடனே அவன் தன் அக்காள் செல்லம்மாளை நினைத்து அவள் ஊருக்கு ஓடினுன். தாயை இழந்த அவன் தாயிடம் கிடைக்கும் அன்பை அவளிடமே எதிர்பார்த்தான். அவளும் அன்பைப் பொழிந்தாள். ஆகவே அவளைக் கலக்காமல் எந்த ஒரு காரியத்தையும் தங்கமணி செய்யமாட்டான். அவள் சொல்லையே தட்டாமல் ஏற்றுக்கொள்வதிலும் அவன் பின்வாங்கியதில்லை.

''அக்கா, நான் இனிமே விவசாயத்தை நேரடியா இருந்து கவனிக்க நினைக்கிறேன்,'' என்று அவளைக் கண்டவுடனே தெரிவித்தான். அப்பொழுது அவள் ஆறுமாதம் கர்ப்பிணியாக இருந்தாள். ஏழாவது மாதத்தில் கந்தப்பக் கவுண்டனூருக்குக் கூட்டி வரவேண்டும் என்று யாரிடமோ தன் தந்தை கூறிக்கொண்டிருந்ததைக் கேட்டு அவனுக்கு இந்த விஷயம் முன்பே தெரிந்திருந்தது.

''அடுத்த மாதம் நீயும் எங்க ஊருக்கு வந்திடுவாய். எனக்கு ஆலோசனை சொல்லவும் பண்ணை வேலைகளிலே பழக்கம் ஏற்படுத்தவும் நல்ல சமயம்,'' என்று மேலும் தனது தீர்மானத்திற்கு அக்காள் மாறுசொல்லக்கூடாதென்ற ஆவலோடு சொன்னுன்.

''விவசாயமா? உன் படிப்பென்னுவது?'' என்று கவலையோடு கேட்டாள் செல்லம்மாள்.

''படிச்சது போதும். விவசாயம் பண்றவனுக்கு இதற்குமேல் படிப்பு எதற்கு?''

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

''பட்டினத்திலே போய்ப் படிச்சு பெரிய எஞ்சினியர் ஆவேன்னு சொன்னதெல்லாம் போச்சா?''

''அந்தத் நெனப்பெல்லாம் இப்போ விட்டாச்சு. பண்ணையை சரியாக்கவனிச்சால் போதும். உணவுப் பஞ்சத்தையாவது போக்க உதவி செய்யலாம்.'' தந்தையின் மேல் குற்றம் சொல்லக் கூடாது என்று அவன் இப்படிப் பேசுகிறுன் என்பது செல்லம்மாளுக்குத் தெரியாமலா போகும்? அவள் பரிவோடு குழைந்து குழைந்து பேசலானுள். அவளும் தந்தையைக்குறித்து எதுவும் குறைவாகப் பேச விரும்பவில்லை.

தங்கமணியைத் தன்னேடு அணைத்து உட்காரவைத்துக் கொண்டு, ''தங்கம், இனிமேல் படிப்பில்லாதவங்க விவசாயத்தைக்கூட நல்ல முறையிலே செய்யமுடியாது. புதுசு புதுசா என்னென்னவோ பயிர்த்தொழில் முறையைப் பற்றி ரேடியோவில்கூடக் கேட்கிறேமே.அத்தனையும் தெரிஞ்சு நல்ல முறையிலே விவசாயம் செய்தால் தான் நல்லது. இனிமே படிப்பில்லாதவனுக்கு மரியாதை இருக்காது. நம்ம நாட்டிலே என்ன நடக்குதுன்னு தெரிஞ்சு கொள்ளக்கூடப் படிப்பு வேணும். ஒவ்வொரு கட்சி அரசியல்காரர்களும் ஒரே விசயத்தை வெவ்வேறு விதமாத் தங்கள் கட்சிக்குத் தகுந்தாப்படி எடுத்துச் சொல்லுவாங்க. எது மெய் என்றுதெரிஞ்சுகொள்ளக் கூடப் படிப்பு வேணும்.'' இப்படி அவள் நீளமா





இந்த வயலின் சிறுவனை உற்றுப் பார்க்க உங்களுக்கு இரண்டு விநாடிகள் தான் தரப்படும். யார்? கண்டுபிடித்துவிட்டீர்களா! ஜனுதிபதி நிக்ஸன்!

—ஏ. சுவாமிநாதன்



கப் பேசித் தங்கமணியைச் சமாதானப் படுத்திவிட்டாள்.

அக்காளைச் சந்தித்துப் பேசிய பிறகு தங்கமணிக்கு மறுபடியும் தனக்கு இயல்பான குதூகலம் மேலோங்கி விட்டது. "அக்கா, நான் வளர்க்கிற மயிலைக் கடாரியை நீ பார்த்திருப்பாய். இப்போ அது ரொம்பப் பெரிசாகிவிட்டது. நேற்றைக்குத்தான் கன்றும் போட்டது. காளைக் கன்று. நல்ல காங்கயம் காளையாக அது ஆகும். அந்தக் கடாரி உனக்குத்தான்," என்று பொருள் பொதிந்த வார்த்தைகளை உற்சாகத்தோடு சொல்லிவிட்டுக் கந்தப்ப கவுண்டனூருக்குத் திரும்பிவந்தான்.

எல்லாரும் அழைத்து வருவதைப்போல ஏழாவது மாதத்திலே செல்லம்மாளை சின்னுசாமி கவுண்டர் தம் வீட்டிற்கு அழைத்துவந்தார். இப்பொழுது குழந்தை முத்துக்குட்டி பிறந்து மூன்று மாதங்களாகிவிட்டன. நல்ல நாள் பார்த்து இன்னும் இரண்டு நாட்களில் செல்லம்மாள் தன் குழந்தையோடு கணவன் வீட்டிற்குப் புறப்படப் போகிறாள். தங்கமணி வளர்த்த மயிலைக் கடாரியும் அதன் கன்றும் வண்டிக்குப் பின்னாலேயே போகப் போகின்றன. பெற்றோர் இல்லத்திலே முதல் குழந்தை பிறந்தபிறகு தாயும் குழந்தையுமாகக் கொண்ட வீட்டிற்கு செல்லும்போது கன்றுபோட்ட இளங் கடாரி ஒன்றைக் குழந்தையின் பாலுக்கென்று அனுப்புவது கொங்குநாட்டு விவசாயிகளின் குடும்பத்தில் தொன்றுதொட்டு இருந்துவரும்படியான பழக்கம். அந்தப் பழக்கத்தை ஒட்டித்தான் தங்கமணி அக்காளுக்கென்றே பிரியமாக வளர்த்த அந்த மயிலைக் கடாரியும், கொழு கொழு வென்று வளர்ந்து துள்ளிக் குதித்துக் கொண்டிருக்கும் காளைக்கன்றும் செல்லப் போகின்றன. காங்கயம் பசு காளைக் கன்று ஈன்றால்தான் விவசாயிகள் அதிகமாக மகிழ்ச்சியடைவார்கள். ஏனென்றால் அந்த இனத்தைச் சேர்ந்த காளைகள் உழவுத்தொழிலிலே அவர்களுக்கு நன்றாக உழைக்கும், பாலை உத்தேசித்து வளர்க்கும் சிந்து முதலிய சீமை மாடுகளின் காளைக்கன்றுகள் விவசாயத்திற்கு அவ்வளவாகப் பயன்படுவதில்லை. அந்த இனப் பசுக்கள் கடாரிக் கன்று போடும்போது தான் மதிப்பு அதிகம்.

செல்லம்மாள் கணவன் வீட்டிற்குப் புறப்படப் போகும் கடைசி இரண்டு நாட்களில் தங்கமணியின் நினைப்






"தமிழா, தூங்காதே!" என்கிற புத்தகம் வேணும். தாங்களா? சார்! சார்!"

வில், அம்பரா, புலித்தோல் ஆசனம், ஆகிய இந்தக் கோலத்துடன் ஒரு மாபெரும் கும்பல் ராஜாஜி அவர்களுடன் அவரது பிரம்பு நாற்காலியைச் சுற்றி உட்கார்ந்து கொண்டிருக்கிறது.

இப்படி ஒரு புகைப்படம்.

இன்னொன்றில் திரு. காமராஜ் அவர்களுடன் போஸ் கொடுத்துக்கொண்டு நிற்கிறார் அந்தக் கூட்டத்தின் தலைவரான நாமாவரம் சஞ்சீவி ராஜா. அவரிடம் உள்ள புகைப்பட ஆல்பத்தைப் பார்த்தால் கொஞ்சம் பிரமை தட்டுகிறது.

அவர் சந்தித்த பிரமுகர்களில் சிலர்: திரு. ராஜாஜி, பாரத ஜனாதிபதி திரு. கிரி, பட்டம் தாணுப்பிள்ளை, பிரம்மானந்தரெட்டி, திரு. காமராஜ், பகவன்தாஸ் கோயங்கா, எம்.ஜி.ஆர்., கே. ஆர். விஜயா, அஞ்சலிதேவி இன்னும் பல பிரமுகர்கள், ஐ.ஏ.எஸ் அதிகாரிகள், அரசியல் கட்சித் தலைவர்கள்.

விசாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள ஒரு கிராமம் நாமவரம். அருகே வாழும் பெரும் பகுதியினர்—பூர்வகுடி மக்கள்.

தொழில்: சோதிடம், மருத்துவம்.

இந்த இரண்டையும் அவர்கள் சாதாரண மக்களிடம் வைத்துக் கொள்வதில்லை. தொழில் அதிபர்கள், அரசாங்க அதிகாரிகள், அரசியல் பிரமுகர்கள், திரைப்பட நட்சத்திரங்கள் ஆகியோரிடமேதான் தொடர்பு.

நாமவரம் பூர்வகுடி மக்கள் ஆறுமாதம் காஷ்மீர் முதல் கன்யா, குமரி வரை சுற்றுகிறார்கள். மழைக்காலத்தில், தங்கள் கிராமம் திரும்பி விடுவார்களாம்.

அந்தப் பூர்வகுடிகளின் தற்போதைய தலைவரான திரு. சஞ்சீவி ராஜா ராஜகம்பீரமாக இருக்கிறார். தெரிந்த மொழிகள்: சரளமாக ஆங்கிலம், தெலுங்கு, இந்தி, அரைகுறைத் தமிழ்.

ராஜாஜியைச் சந்திக்கப் போயிருந்போது, நாமவரம் பூர்வகுடித் தலைவர், உப-தலைவர், ஊருக்குப் பெரியவர் (வயதில்) மற்றும் வட்டாரத் தலைவர்கள் ஆக எட்டு நபர்கள் சென்றார்கள்.

ராஜாஜி பிரம்பு நாற்காலியில் அமர்ந்திருக்க, அவரைச் சுற்றிலும் தரையில் நாமவரம் பூர்வகுடியினர் அமர்ந்திருந்தனர்.



"ராஜாஜிக்கு ஒரு மூலிகைத் தைலம் விசேஷமாகத் தயாரித்து, தலையில் தேய்த்துக் குளிக்க வேண்டும் என்று சொல்லிக் கொடுத்தோம்," எனக் குறிப்பிடுகிறார் சஞ்சீவி ராஜா.

'சில பிரமுகர்கள் எங்களுடன் புகைப்படம் எடுத்துக்கொள்ள மட்டும் இசைந்தார்கள். சிலர், "நேரமில்லை," என்றார்கள். சிலர், "என்ன சோதிடம் சொல்வாய் பார்க்கலாம்," என்று கை நீட்டினார்கள்; சிலர் நாட்டு மருந்துகளை என்னிடம் வாங்கினார்கள்." என்று தெரிவித்தார் சஞ்சீவி ராஜா.

**தகவல்: ஏ. சுவாமிநாதன்**

---

### புதியது

"வருஷா வருஷம் சினிமா நடிகைகள் படம் போட்ட காலண்டர் தயார் பண்ணி அலுத்துப் போச்சு! அதனாலே, இந்தத் தடவை புதுமுறையாக...."

"என்ன செய்தீர்கள்?"

"நடிகைகளின் அம்மா, பாட்டி, இவங்க படம் போட்ட காலண்டர் தயார் செய்திருக்கிறோம்!"

### பழையது

மனைவி: "ருசியிலிருந்து கண்டு பிடியுங்கள். இன்று சமைத்தது நானா, உங்க அம்மாவா? சொல்லுங்க பார்க்கலாம்?"

கணவன்: "ஓ! எனக்கா தெரியாது? எங்க அப்பாவின் சமையல்?"

### அரியது

ஒரு நோயாளி டாக்டரிடம் வந்து கேட்டுக்கொண்டார்: "இன்று மாலை எங்கள் வீட்டில் என் தாத்தாவின் வியாதிக்குப் பெயர் சூட்டு விழா கொண்டாடப் போகிறோம். நீங்களும் அவசியம் வரணும்."

பெல்லாம் அக்காவைப் பற்றியும், முத்துவைப் பற்றியுமே சுற்றிச் சுற்றி வளைந்து வந்துகொண்டிருந்தது. "அக்கா, அடுத்த மாசம் போகலாம். இப்போ என்ன அவசரம்?" என்று தங்கமணி ஏக்கம் கலந்த குரலிலே திடீரென்று கேட்டான்.

"அடுத்த மாசம் போனு அப்போ எங்களை விட்டுப் பிரிய உனக்குச் சம்மதந்தானு?"

"நீயும் முத்துக்குட்டியும் எப்பவும் என்னேடே இருப்பதுதான் எனக்கு ஆசை. ஆனு அது முடியாது; ஒரு மாசமாவது இருக்கக்கூடாதா?" அவன் கேள்வி கெஞ்சுதலாக முடிந்தது.

"தங்கம், ரட்டை மாசத்திலே குழந்தையை எடுத்துக்கொண்டு போகக்கூடாது. அப்புறம் மார்கழி மாசம் வந்துடும். நான் சமையல் செய்தால் தான் மச்சானுக்குப் பிடித்தமாக இருக்கும்."

இந்த விளக்கத்தால் தங்கமணி முற்றிலும் ஆறுதல் அடையவில்லை.

"அக்கா, முத்துக்குட்டிக்குத் தங்கச்சங்கிலி போட்டா அழகா இருக்கும். அப்பா போடவே இல்லை. தங்கச் சங்கிலியிலே ஒரு பதக்கம் இருக்கவேணும். அதிலே பாலமுருகன் படம் இருக்க வேணும். ரொம்ப நல்லாயிருக்கும்." குழந்தைக்குத் தங்கநகை போட்டு அனுப்பும் வழக்கத்தைத் தந்தை நிறைவேற்றவில்லையே என்ற அவனுடைய ஏக்கம் எப்படியோ வெளிப்பட்டுவிட்டது. அந்த ஏக்கம் குழந்தை பிறந்தது முதல் வளர்ந்து வருகிறது என்பதை செல்லம்மாள் முன்பே பல தடவைகளில் குறிப்பாகக் கண்டு கொண்டிருந்தாள்.

"தங்கச்சங்கிலி எதுக்கு ஆண் பிள்ளைக்கு? அதெல்லாம் போடவில்லை என்று மச்சான் சொல்லமாட்டார்."

"மச்சான் சொல்லமாட்டார். அது எனக்குத் தெரியும். ஆனு ஊரிலே எல்லாரும் மச்சானைப்போல் இருப்பாங்களா? பெரியதனக்காரர் விரலுக்கு ஒரு மோதிரங்கூடப் போட்டனுப்பவில்லை என்றுதான் பேசுவார்கள். எனக்குத் தெரியும்," தங்கமணியின் கண்கள் கலங்கின.

"நான் பிறந்தபோது நம்ம பாட்டி வீட்டிலே எனக்குப் போட்ட சங்கிலி இருக்குது. ஊருக்குப் போனதும்

## ஒரு வறுக்கமான செய்தி:

பிளோரிடா மாநிலத்தில் ஒரு காட்டிலாக அதிகாரிக்கு ஒரு பிரச்னை ஏற்பட்டது. அவர் தேக்கு மரம் பயிரிட வேண்டியிருந்தது. தேக்கு விதைகளை எவ்வளவு நேரம் தண்ணீரில் ஊறவைத்து விதைத்தாலும் அவை முளைக்காமல் இருந்தன.

பத்திரிகைகளில் அவர் ஒரு செய்தியைப் பார்த்தார். இந்தியாவில் உள்ள காடுகளில் ஆண்டுதோறும் காட்டுத் தீ மூண்டு எரிந்த பிறகு பெய்யும் மழைக்குப் பின் நிறையத் தேக்குக்கன்றுகள் முளைப்பதாக அந்தச் செய்தி கூறியது. அவர் மூளையில் ஒரு மின்னல் பிரகாசம். தேக்கு விதைகளைச் சற்று வறுத்துவிட்டு முளைக்கப்போட்டாராம். ஒன்றுகூட பழுதாகாமல் எல்லாம் நன்முக முளைத்தனவாம்.

தகவல்: ஆர். மரகதம்.

# இருமலா?
# க்ளைகோடின்
## சாப்பிட்டதும் போய்விட்டதே!



அவளுடைய கடுமையான இருமலை க்ளைகோடின் வெகுசீக்கிரம், பரிபூரணமாக நிறுத்தியது.

பூர்ண இருமல் கட்டுப்பாட்டுக்கு க்ளைகோடினுக்கு இணை எதுவுமில்லை! பாதிக்கப்பட்ட எல்லா பகுதிகளிலிருந்தும் இருமலை விரட்டியடிக்க மருத்துவரீதியாக அங்கீகரிக்கப்பட்ட க்ளைகோடின் புதிய ஃபார்முலா செயல்படுவது எப்படி என்று பாருங்கள்:



- மூளையில்—இருமல் கேந்திரத்தைக் கட்டுப்படுத்துகிறது
- தொண்டையில்—சளி அடைப்பை அகற்றி எரிச்சலைச் சமனப்படுத்துகிறது
- மார்பில்—இறுகிய தசைநார்களுக்கு இதமளித்து சுலபமாக சுவாசிக்க உதவுகிறது
- நுரையீரல்களில்—அடைத்துக் கொண்டிருக்கும் கோழையைத் தளர்த்தி சளியை வெளியேற்றுகிறது







# க்ளைகோடின்
**டெர்ப் வசாகா**

இருமல்களுக்கு, மிக அதிகமாக விற்பனையாகும் நம்பகமான வீட்டு நிவாரணி.

everest/659d/ACW/tam

# 'டிரான்ஸிஸ்டர் சேதம்' உலோக உறையிட்ட ட்யூடர் பேட்டரிகள் சேதம் தடுக்க உதவுகின்றன

டிரான்ஸிஸ்டர்களுக்கான பேட்டரிகள் பல. காகித உறையிட்டுள்ளன, ஆனால் உலோகம் போல் மின்னும்படி வார்னிஷ் செய்யப்பட்டுள்ளன அல்லது மெருகிடப்பட்டுள்ளன. பேட்டரிகளிலுள்ள அமிலங்கள் அக் காகிதத்தைத் தின்று, அருமையான உங்கள் டிரான்ஸிஸ்டரை சேதப்படுத்திவிடும்.

ஒழுகுவதைத் தடுப்பதிலே, காகிதத்தைவிட மிகப் பல மடங்கு மேலானது உலோகம்.

அதனால்தான், ஒழுகல்-தடுப்புடைய, உலோக உறையிட்ட பேட்டரிகளாக உங்களை அடைகிறது ட்யூடர். புலிச் சக்தி செறிந்த ட்யூடர், ஒழுகுவதை உண்மையாகவே தடுக்கிறது... உங்கள் டிரான்ஸிஸ்டரைப் பாதுகாக்கிறது... நீண்ட ஆயுள் படைத்தது...ஓங்கிய ஒலியுடன் நிலைமாறாத சக்தியை அளிக்கிறது.

ஸ்டாண்டர்டு சைஸ் வேண்டுமெனில் ட்யூடர் 1051 அல்லது 151 என்றோ, மீடியம் சைஸ் வேண்டுமெனில் ட்யூடர் 1031 அல்லது 131 என்றோ கேளுங்கள்.

**மறவாதீர்கள். தனித்தனியே ஒவ்வொரு ட்யூடர் பேட்டரியும் பரிசீலனை பெற்றது!**




ஆப்டே க்ருப் தயாரிப்பு



**ட்யூடர் பேட்டரிகள்**
**புலிச் சக்தி செறிந்தவை**

H.24 T/A

அதை முத்துக்குட்டிக்குப் போடலாம்னு இருக்கிறேன்.''

''இப்படித்தான் மூடி மறைக்க வேணும். நம்ம தலைவிதி.'' அக்காளுடைய சொல்லைக் கேட்டு இவ்வாறு கூறிவிட்டு அழுதேவிட்டான் தம்பி. அடுத்த நாள் இன்னும் பெரிய அதிர்ச்சி தங்கமணிக் குக் காத்துக்கொண்டிருந்தது. சின்னு சாமிக் கவுண்டர் கையிலே காசில்லை; அவ ருக்குக் கடன் கொடுப்பார் யாருமில்லை. கள்ளச்சாராயம் குடித்து அதனால் ஏற் படுகின்ற வெறியைவிட அதை வாங்கு வதற்குக் காசு எப்படியாவது கண்டு பிடிக்கவேண்டும் என்கிற பெரிய வெறி அவரை உலுக்கிக் கொண்டிருந்தது. அவர் பித்துப் பிடித்தவர் போலானார். மதியை இழக்கச் செய்யும் மதுவை நாடி யாரும் நினைக்கமுடியாத காரியத்தை அவர் செய்யத் துணிந்துவிட்டார். அன்று பக்கத்தூரிலே சந்தை. செல்லம்மாளுக்கு அனுப்பவேண்டிய கடாரியையும் கன்றை யும் பொழுது விடிவதற்கு முன்னதாகவே யாரும் பார்க்காதவாறு சந்தைக்கு ஓட்டிச் செல்லும்படி பண்ணையாள் ஒருவனுக்குக் கட்டளையிட்டார். அவன் மலைத்துப் போனான்.

''என்ன, நம்ம சின்னக் கவுண்டச்சிக்கு அனுப்புற....?''

''ஆமாண்டா!'' என்று அதட்டினார் சின்னுசாமிக்கவுண் டர். ''சொன்ன சொன்ன வேலை யைச் செய்வியா, அதை விட் டுட்டு என்னமோ பேச்சைப் பாரு. இந்த விசயம் வெளி யிலே மூச்சுவிடக் கூடாது. சாக் கிரதை. யாராவது கேட்டா ராத்திரியிலே திருட்டுப் போய்ட்ட துன்னுதான் சொல்ல வேணும்.''

பண்ணையாள் அப்ப டியே ஊமையாகிவிட்டான். எழு நூற்று ஐம்பது ரூபாய் விலை கொடுப்பதற்கு யாரும் முந்திக் கொண்டு வரக்கூடிய மதிப்புள்ள கடாரியையும் கன்றையும் முந் நூறு ரூபாய்க்குச் சின்னுசாமிக் கவுண்டர் விற்றுவிட்டார். அவ ருக்குப் பணம் உடனே வேண்டும். மேலும் அவர் பேரம் பேசிக் கொண்டு சந்தையிலே நின்றிருந் தால் விஷயம் வெளியாகிவிடும் அல்லவா?

முதல்தரமாக வடித்த கட்டுப்பானைச் சாராயம் அன்று புட்டி புட்டியாக ஓரிடத்திற்கு வருகிற தென்று அவருக்குத் தகவல் கொடுத்திருந் தார்கள். பணத்தை மடிப்பையிலே வைத் துக்கொண்டு பகலெல்லாம் எங்கோ சுற் றிவிட்டு மாலைமயங்கும் நேரத்திலே அந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

மாலைநேரத்திலே பள்ளி முடிந் ததும் தங்கமணி வீட்டிற்கு ஓடோடியும் வந்தான். முத்துக்குட்டியைத் தங்கள் வீட்டிலே வைத்துக் கொஞ்சுவதற்கும் அவன் சிரிப்பை ரசிப்பதற்கும் நாளை ஒரு நாள்தானே இருக்கிறது? மேலும் அக் காளுக்குத் தான் கொடுக்கப் போகும் மயிலைக்கடாரிக்கு இன்று மாலை ஒரு வேளைக்குத்தான் தங்கள் தோட்டத்திலே யிருந்து தன் கையாரப் பச்சைப்புல் பிடுங்கிவந்து போட முடியும். கடாரிக் குக் கொம்பைச் சுற்றி அணிவதற்கு வண்ணவண்ணப் பாசிமணிகளும், சங்கும் வாங்கிக் கோத்து வைத்திருந்தான். அக்காள் ஊருக்குப் புறப்படும்போது அவள் கையிலே கொடுத்து இளம்பசு வுக்குக் கட்டச் சொல்ல வேண்டுமென்று யாருக்கும் தெரியாமல் இரகசியமாக வைத்திருந்த ஏற்பாடு இது! 'கணகண' வென்று ஒலிக்கும் ஒரு சிறிய மணியை யும் கன்றுக்குட்டியின் கழுத்திலே கட்டு





வதற்கு வாங்கியிருந்தான். கன்றுக்குட்டி குதிக்கும்போது அந்த மணி ஒலிப்பதை இப்பொழுதே அவன் கற்பனை செய்து கொண்டு மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தான். பள்ளியில் எடுத்த ஓட்டம் வீட்டிற்கு வந்துதான் நின்றது.

''தங்கம், என்ன இப்படிப் பெருமூச்சு வாங்கிக்கொண்டு ஓடிவந்திருக்கிறாய்? மேலெல்லாம் வேர்த்துக் கொட்டுதே! மெள்ள வரக்கூடாதா?'' என்று செல்லம்மாள் அன்பொழுகக் கேட்டாள்.

''அக்கா, முத்து எங்கே? அவனுக்குப் பசும்பால் கொடுக்க நானே இன்று பண்ணைக்குப் போய் கடாரிக்குப் புல்போட்டுவிட்டுக் கறந்து வரேன்.''

''உனக்குப் பால் கறக்கத் தெரியுமா?''

''அக்கா, மயிலைக் கடாரி நான் பால்கறந்தால் ஒன்றுமே செய்யாது, அணைகயிறு கூட வேண்டாம். ஆனா நீங்க உங்க ஊரிலே அதுக்கு அணைகயிறு போட்டுத்தான் கறக்கவேணும். நான் போய் முத்துக்குட்டியைப் பாத்துட்டு பச்சைப் புல் பிடுங்கப் போகவேண்டும். உங்க ஊரிலே யாரப்படிப் பண்ணுவாங்களோ?'' என்று சொல்லிக்கொண்டே அவன் வீட்டுக்குள் போய்விட்டான். அங்கிருந்து, ''முத்துக்குட்டி, இதோ மாமா வந்துட்டேன், எங்கே, சிரி பார்க்கலாம்'' என்று அவன் கொஞ்சிப்பேசுவதும் குதூகலமாகச் சிரிப்பதும் வீட்டுக்கு முன்னால் இருந்தப் பூச்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த செல்லம்மாளின் செவிகளிலே இன்பத்தாரையாக வந்து பாய்ந்தன. அடுத்த கணத்திலே தங்கமணி பண்ணைக்கு ஓடிவிட்டான். சிற்றுண்டி அருந்தக்கூட அவனுக்கு நேரமில்லை. அத்தனை அவசரம்.

பண்ணையிலே அவன் மயிலைக் கடாரியைக் கண்டானா? எங்கே என்று கேட்டதற்குப் பண்ணையாட்கள் சரியாகப் பதில் சொல்லவில்லை. பண்ணைக்காரரின் கோபத்திற்கு அளவிருக்காது. என்ற நினைப்பே அவர்கள் வாயை அடைத்துவிட்டது. தங்கமணிக்கு அவர்களைக் கேட்டுக் காலத்தை வீணாக்குவதில் விருப்பமில்லை. தானே தேடப் புறப்பட்டு விட்டான். அவன் தோட்டத்தைச் சுற்றி எல்லா மூலைமுடுக்குகளுக்கும் ஓடிப்பார்த்தான். தன்னைவிட்டு அடுத்தநாள் பிரிவதை எப்படியோ உணர்ந்து கொண்டு எங்காவது தலைமறைவாகப் போய் நின்று கொண்டதோ, என்னவோ? இந்த எண்ணம் தோன்றும்போது தங்கமணிக்கிருந்த கவலைக்கு நடுவே ஓர் இனந்தெரியாத இன்ப உணர்ச்சியும் உண்டாயிற்று. ஆனால் இந்த உணர்ச்சி சில விநாடிகளிலே மறைந்துபோய்விட்டது. மயிலைக் கடாரி தலைமறைவாகச் சென்றிருந்தாலும் கன்றுக்குட்டி தொழுவத்திலே இருக்கவேணுமே? பால் கறக்காத முன்பு கன்றைத் தாயோடு போக விடமாட்டார்களே?

தங்கமணி ஓடியோடிப் பார்க்காத இடமெல்லாம் பார்த்தான். அதற்குள்ளே நன்றாக இருட்டிவிட்டது. அவன் காட்டுப்பாதை வழியே ஓடினான். யாருமே எதிரில் வரவில்லை. வந்தால் அவர்களிடத்திலே கேட்டுப் பார்க்கலாம், என்பது அவன் நோக்கம். அவன் சென்ற வழியிலே யாரும் தென்படவில்லை. ஆகையால் அந்தக் காட்டுப்பாதையை விட்டுவிட்டுக் கல்லும் முள்ளும் நிறைந்த ஒற்றையடிக் குறுக்குப்பாதையின் வழியாக வண்டிகள் செல்லக்கூடிய அகலப்பாதை ஒன்றிற்கு வந்துசேர்ந்தான். தொலைவிலே சந்தையிலிருந்து திரும்பிக்கொண்டிருக்கும் ஒரு கூட்டம் வருவதைப் பார்த்து, அவர்களைச் சந்தித்து விசாரிக்க அங்கு நின்றுகொண்டிருந்தான். ஆண்களும், பெண்களுமாகப் பலர் மூட்டைகளிலும் கூடைகளிலும் அந்த வாரம் முழுவதற்கும் வேண்டிய சந்தைச் செலவுகளை வாங்கிக் கொண்டு ஏதேதோ பேசிக்கொண்டு வந்தார்கள். பெரியதனக்காரரைப் பற்றியும் பேச்சு அடிபட்டது. தங்கமணியைக் கண்டதும் சட்டென்று அவர்கள் பேச்சை நிறுத்திக் கொண்டார்கள். இது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''ஏன் என்னைக் கண்டதும் எல்லாரும் பேச்சை நிறுத்தி விட்டீங்க? அப்படி என்னிடத்திலே என்ன பயம்? நானென்ன புலியா, கரடியா?'' என்று

---

பச்சையப்பன் கல்லூரியில் தற்சமயம் தத்துவப் பிரிவில் பேராசிரியராக இருக்கிறார் டாக்டர் திரு. முத்துராமன்.

டாக்டர் முத்துராமனின் ஆசிரியர் யார்?

பேராசிரியர் டாக்டர் டி. எம்.பி. மகாதேவன். அவர் சென்னைப் பல்கலைக்கழகத் தத்துவத்துறைத் தலைவராக விளங்கியவர்.

# குருவுக்குக் குருவுக்குக் குரு



டாக்டர் டி. எம்.பி. மகாதேவன் யாரிடம் பயின்றவர்?

பேராசிரியர் பி. சங்கரநாராயணன் அவர்களிடம். அவர் மாநிலக் கல்லூரி, விவேகானந்தா கல்லூரி, பம்பாய் பவன்ஸ் கல்லூரி ஆகிய இடங்களில் தத்துவப் பேராசியராகப் பணிபுரிந்தவர்.

பேராசிரியர் சங்கரநராயாணனின் குரு யார்?

சென்னை மாநிலக் கல்லூரியில் விரிவுரையாளராக இருந்த டாக்டர் திரு. ராதாகிருஷ்ணன் அவர்கள்!

---

தங்கமணி சகஜமாகக் கேட்டான்.

யாரும் வாய்திறக்கவே இல்லை. ''என்ன ஒருத்தரும் பதில் பேசவே இல்லையே?'' என்று மறுபடியும் தங்கமணி வற்புறுத்திக் கேட்டான். சந்தையிலிருந்து வந்த உலக அனுபவம் வாய்ந்த ஒரு கிழவர் பேசலானார். ''இல்லப்பா, சந்தையிலிருந்து வீட்டுக்குப் போய்த்தான் பெண்களுக்கு அடுப்பு மூட்டவேணும். அதனாலே ஊருக்குப் பக்கமா வந்தவுடன் அந்த நெனப்பு வந்திட்டுது. புள்ளை குட்டிகள் தூங்கிப் போகும். அதுகளுக்கு ஒரு வாய் சோறு ஊட்டவேணுமோ இல்லியோ; இந்த நெனைப்பிலே கால்வேகம் அதிகமாச்சு. பேச்சு நின்னுபோச்சு. அவ்வளவுதான்.'' கிழவர் மிகத் திறமையாகப் பதில் அளித்தார்.

''ஆமாம்ப்பா, உங்கூடப் பேசாமல் எங்களுக்கென்ன சண்டையா?'' என்று மற்றவர்களெல்லாம் ஒரே மூச்சில் கூறிவிட்டுப் பறந்துவிட்டார்கள்.

ஆனால் கிழவரைத் தங்கமணி போகவிடவில்லை. ''தாத்தா, கொஞ்ச நில்லுங்க,'' என்று கையைப் பிடித்து நிறுத்திவிட்டான். எல்லோரும் காது கேட்காத தூரம் சென்றபிறகு அவன், ''தாத்தா, நீங்க எல்லாரும் சேர்ந்தாப்பலே என்னைக் கண்டதும் பேச்சை நிறுத்தியதிலிருந்து எனக்கு என்னவோ சந்தேகமா இருக்குது. என்னுடைய மயிலைக் கடாரியைப் பார்த்திங்களா? ஒண்ணும் ஒளிக்காமே எனக்குச் சொல்லுங்க தாத்தா,'' என்று ஏக்கம் நிறைந்த குரலில் கேட்டான்.

ஊர்ப் பெரியதனக்காரர் செய்த காரியத்தை வெளியில் சொல்ல விரும்பாமல் எல்லோரும் நாவை அடக்கிக் கொண்டு சென்றுவிட்டார்கள். கிழவரும் அப்படிச் செல்லத்தான் முதலில் முயற்சி செய்தார். ஆனால் இப்பொழுது அந்தச் சிறுவன் தம்மைப் பிடித்து நிறுத்தித் தனியாகக் கேட்கிறபோது அவரால் உண்மையை ஒளிக்க முடியவில்லை. சின்னுசாமிக் கவுண்டருடைய கோபத்திற்கு ஆளானாலும் சரி, இந்தத் தங்கமான பையனை ஏமாற்றக்கூடாது என்று அவர் துணிந்துவிட்டார். சந்தையிலே சின்னுசாமிக் கவுண்டர் கடாரியை விற்றது அனைவருக்கும் தெரிந்து விட்டது என்ற உண்மையைக் கூற அவர் தயங்கவில்லை.

தங்கமணி வீட்டிற்கு ஓடிவந்தான். அதற்குள் இரவு ஒன்பது மணிக்குப் பக்கமாகி விட்டது. செல்லம்மாளைக் கண்டதும் அவன் 'கோ'வென்று கதறியழுதான்.

''என்ன தம்பி? என்ன நடந்தது? இவ்வளவு நேரம் எங்கே போனாய்?'' என்று அவன் கண்களைத் துடைத்துக் கொண்டே செல்லம்மாள் கேட்டாள், முதலில் அவனால் பேசவே முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது. ஏதேதோ தொடர்பில்லாமல் சொல்லலானான். செல்லம்மாள் அவனைப் பின்கட்டிலிருந்த அறைக்குள்ளே அழைத்துச் சென்று, சாந்தப்படுத்தி, விசயம் என்னவென்று சொல்லுமாறு தாயன்போடு கேட்டாள்.

''எல்லாம் மானக்கேடான விசயம்தான். வேறென்ன,'' என்றான் தங்கமணி.

''என்ன தங்கம், நீ சொல்றது எனக்கு விளங்கவே இல்லையே?''

''அக்கா, உனக்கு ஒன்னுமே விளங்கவேண்டாம். நீ சந்தோசமா முத்துக்குட்டியை நாளைக்கு எடுத்துக்கொண்டு போவாய்னு நெனச்சேன். எனக்கு இனி இந்த வீட்டிலே என்ன சோலி? மச்சா

னுடைய முகத்திலே நானெப்படி இனி முழிப்பேன்?'' மறுபடியும் விக்கி விக்கித் தேம்பலானான் தங்கமணி.

''தம்பி, விசயத்தை நேராகச் சொல்லாமல் இப்படிக் குழந்தை மாதிரி தேம்பி அழுகிறாயே?''

''ஆமாம், நான் குழந்தை தான். உன்னைப் பெத்த தாயார் என்னை ஏன் பெத்தெடுத்தாள்? அவள் போகும் போதே என்னையும் கூட்டிக்கிட்டுப் போயி ருந்தால் எவ்வளவோ மேலாக இருக்கும். இந்தக் குடிவெறி அவமானத்தை நான் பார்த்திருக்கவே மாட்டேன்.''

செல்லம்மாளுக்கு ஓர் அளவு ஏதோ தெரிந்தது போலிருந்தது. ''குடி யாலே கெட்டுப்போன குடும்பங்கள் எத்தனையோ இருக்குது. நாம் அப்படி ஒண்ணும் சுத்தமாக் கெட்டுப் போகலே. நீ படிச்சு மேலுக்கு வா. அதுக்குள்ளே சொத்தெல்லாம் போனாலும் போகட்டும். நீ சம்பாதிச்சுடுவாய்.'' ஆறுதலாக இப் படிப் பேசினாள்.

''எனக்கு இனிப் படிப்பும் வேண்டாம்; ஒண்ணும் வேண்டாம். நான் எங்காவது தலைமறைவா ஓடிப்போறேன். 'மகளுக்கு அனுப்ப வளர்த்த கடாரி கள்ளச்சாராயத்திற்குப் போய்விட்டது' என்று எல்லாரும் பேசுவதைக் கேட்டு என்னால் பொறுக்க முடியாது.''

செல்லம்மாளுக்கு நடந்த சம் பவங்களெல்லாம் பளிச்சென்று புலப் பட்டு விட்டன. ''கடாரி இல்லாவிட் டால் போகட்டும். 'அந்தக் கடாரியின் பால் அவ்வளவு நல்லா இல்லேன்னு சந்தையிலே அப்பா வித்துட்டாங்க. வேறொரு பசு சீக்கிரம் அனுப்புவாங்க,' இன்னு சொல்லிப்பிடலாம்.''

''அக்கா, நீ மட்டும் கடாரி இல்லாமல் ஊருக்குப் போனா நான் உண்ணாவிரதமிருந்து செத்துப் போவேன். இது நிச்சயம்.''

செல்லம்மாள் கண்களில் கண் ணீர் தாரை தாரையாக வழியலாயிற்று. அதைக் கண்டு தங்கமணி மீண்டும் தேம்பலானான்.

இந்தச் சமயத்தில் பக்கத்து அறையிலிருந்து யாரோ உரத்த குரலில் புலம்புவது கேட்டது. ''யாரது? அது அப்பாவின் படுக்கை அறை ஆச்சே?'' இவ்வாறு செல்லம்மாள் கூறிக் கொண்டே வேகமாக அங்குச் சென்றாள். தங்கமணி யும் பின்னாலேயே நடந்தாள்.

அங்கே படுக்கையில் குப்புறப் படுத்துக் கொண்டு சின்னுசாமிக் கவுண் டர் கதறி அழுது கொண்டிருந்தார்.

''அப்பா, எதுக்கு இப்படி அழுகிறீங்க? அம்மா செத்தபோது அழுத மாதிரி இப்போ அழுவதற்கு என்ன வந்துவிட்டது?'' என்று செல்லம்மாள் தன் துயரத்தை மறைத்துக் கொண்டு கேட்டாள்.

''செல்லம்மா, தங்கம்! என் கண்மணிகளே! இன்னைக்குத்தான் எனக் குப் புத்தி வந்தது. நீங்க பேசியதை எல் லாம் கேட்டுக் கொண்டு தானிருந்தேன்.''

''அதெல்லாம் ஒண்ணுமில் லையப்பா - தங்கமணி விளையாட்டுத் தனமா என்னமோ சொல்லிக்கொண் டிருந்தான். அவ்வளவுதான்.''

''நீங்க ரண்டு பேரும் என்னை ஒரு வார்த்தைக் கூடக் கேவலமாகப் பேசவில்லையே? அப்படிப் பேசியிருந்தா எனக்கு ஆறுதலா இருந்திருக்கும். இன் னைக்கு நான் பட்ட அவமானத்தைப் போல என்னைக்குமே பட்டதில்லை. கள்ளச் சாராய புட்டிகளை வாங்கி மூட்டையிலே கட்டி நானே சுமந்து கொண்டு வரும் போது நம்ம நாட்டுப் போலீஸ்காரர்கள் அங்கே சூழ்ந்துகொண் டார்கள். இப்ப எல்லாம் காவல் கட்டு திட்டங்களை அதிகப்படுத்தி இருக்காங் களாம். தெரியாமல் நானும் மாட்டிக் கொண்டேன்.''



''என் வாட்ச் நின்று விட்டது உன் வாட்ச்சிலே கரெக்ட் டயம் என்னப்பா?''

''பைசா தர்மம் போடுங்க சொல்றேன்.''

மீன் துறைத் தொழில்கள்



# நவீனமடைகிறது

இந்திய மீன்துறைத்
தொழில் நவீனமடைகிறது...
இதற்கு பயனுள்ள
முறையில் பங்காற்றுகிறது கர்வாரே நைலான்ஸ்

இந்திய மீன்துறைத் தொழில் வெகுவேகமாக மாறிவருகிறது. முற்போக்கான மீனவர் யாவரும் நைலான் மீன் வலைகளை உபயோகிக்கிறார்கள்; வெகு விரைவில் தம் படகை இயந்திரப் படகாக்கக் கருதியிருக்கிறார்கள். எனவே கூடுதலான சிரமமின்றி, மீன் பிடிப்பை இரட்டிப்பாக்கி, லட்சக்கணக்கானவர்களுக்கு அதிக உணவளிக்க முடியும். இந்த முன்னேற்றத்தில் கர்வாரேயும் ஒரு சுறுப்பாகப் பங்காற்றுகிறது.

மீன் வலைகளுக்கான, உறுதிமிக்க, வலுவான, விசேஷ நைலான் நூலிழையைத் தயாரிக்கிறது கர்வாரே. 1962 ல், ஜிம்ப்ரியில் (பூனா) நவீன ஆலையை நிறுவி கர்வாரே நைலான் மீன்வலை ட்வைனைப் பொறுத்தவரை, நமது தேசத்தை சுய நிறைவுடையதாகச் செய்துள்ளது. கர்வாரே நைலான் மீன்வலை இந்திய மீன் துறைத் தொழிலுக்கு ஒரு வரப்பிரசாதம். மீனவர் ஒவ்வொருவரும் இதை அறிவார்.

இந்தியாவின் முதல் நைலான் நூலிழை



கர்வாரே நைலான்ஸ்,
ப்ரை. லிட்., பம்பாய்-7

Vision-69 2 tam

"அப்புறம்?" இருவருக்கும் அவர் மேல் அனுதாபம் ஏற்படத்தொடங்கியது.

"அப்புறம் என்ன? புட்டிகளையெல்லாம் வீசி எறிஞ்சிட்டுக் காட்டிலும் மேட்டிலுமா வளைஞ்சு வளைஞ்சு ஓடி ஓடித் தப்பிச்சு வந்து சேர்ந்தேன்,"

"என்னப்பா, கட்டியிருக்கிற வேட்டி யெல் லாம் கிழிஞ்சு கிடக்குது? பாதமெல்லாம் ரத்தம் ஒழுகி யிருக்குது?" என்று திடுக்கிட்ட குரலில் செல்லம்மாள் கேட்டாள்.

"இடது கால் பெருவிரல் நகமே பிளந்து போச்சே, என்னப்பா இது?"- இவ்வாறு தங்கமணியும் கவலையோடு கேட்டான்.

"போலீஸ் கையில் அகப்பட்டிருந்தா இந்த ஊர்ப் பெரியதனக்காரன் ஜெயில்லே ஆறுமாசம் கிடந் திருப்பான். பெரியதனமெல்லாம் சின்னத்தனமாகி இருக்கும். முள் குத்தறதையும், கல்லில் இடித்துக் கொள்ளறதையும் பார்க்காமல் எப்படியோ—உங்க அம்மா செஞ்ச புண்ணியம், நீங்க செஞ்ச புண்ணியம் தப்பிச்சு வந்தேன். அப்படியே கட்டிலே கிடந்தேன்." கண்களிலே நீர் ததும்ப இப்படித் தந்தை பதில் சொன் னார்.

இந்தப் பதிலைக் கேட்டு முடிவதற்கு முன்பே செல்லம்மாள், "தம்பி, அந்த ஸ்டவ் அடுப்பை ஏத்தி வெந்நீர் உடனே வைக்கவேணும். பாதமெல்லாம் கழுவி மருந்து போடணும். நீ அந்த ஸ்பிரிட் பாட்டிலை எடுத்து வா. நான் சமையலறைக்குப் போறேன்," என்று அவசரம் அவசரமாகக் கூறிவிட்டு நடக்கலா னாள். அவள் கூறியதுதான் தாமதம். தங்கமணி ஒரே தாவில் சென்று அந்த அறையிலிருந்த அலமாரியைத் திறந்து ஸ்பிரிட் புட்டியை எடுத்தான். அது காலியாக இருந்தது. சில நாட்களுக்கு முன்புதான் வாங்கிவந்த அந்தப் புட்டி காலியாக இருப்பதைக் கண்டு ஆச்சரியத் தோடு மற்றவர்களுக்குக் காட்டினான்.

"என்னக்கா ஸ்பிரிட் பாட்டில் வாங்கி வந்து நாலு நாள் கூட ஆகலை. அதுக்குள்ளே தீர்ந்து போச்சே!"

"அதுவா, நான்தான் அதைக் குடிச்சுட் டேன்," என்று வெளிப்படையாக சின்னுசாமிக்கவுண்டர் தலையைக் குனிந்தவாறே தெரிவித்தார்.

"ஐயையோ, அது உயிருக்கே ஆபத் தாச்சே?" என்று அக்காளும், தம்பியும் ஒரே மூச்சில் கூவினார்கள்.

"ஆமா, குடிக்க வேணும்னு வெறி வந் துட்டா மனுசன் என்ன வேணும்னாலும் செய்வான். நல்ல வேளையா குடிச்ச ஸ்பிரிட் அத்தனையையும் வாந்தி எடுத்து வெளியில் வந்துட்டுது. இனிமே இந்தச் சாரா யம், கள் எதையும் கண்ணால் கூடப் பார்க்கமாட்டேன். உங்களுக்கு இப்பவே சத்தியம் பண்ணிக் கொடுக்க றேன்," என்று கூறிக்கொண்டே, அவர் என்ன செய்யப் போகிறார் என்பதை அறிந்து கொள்ளு முன்னரே, சின்னுசாமிக் கவுண்டர் அக்காள் தம்பி இருவர் கை களிலும் "சத்தியம், சத்தியம்," என்று அடித்தார்.





"அக்காளுக்குக் கடாரி நாளைக்கு அனுப்ப வேணுமே! இல்லா விட்டால் அதொரு மானக் கேடாக வந்து சேரும்," என்று தங்கமணி கவலையோடு எடுத்துச் சொன்னான்.

"கடாரியைத் திருப்பி வாங்கி வர முடிவு பண்ணிட்டேன். வாங்கியவன் எனக்கு ரொம்ப வேண்டியவன். விச யத்தைச் சொன்னால் கொடுக்க அட்டி சொல்ல மாட்டான். முன்னூறு ரூபாய் வேணும்."

"என்னிடம் நூறு ரூபாய் உங்க மருமகன் கொடுத்துட்டுப்போனது இருக்குது," என்று உடனே கூறினாள் செல்லம்மாள்.

"அந்தப் பணத்தைத் தொடக் கூடாது. அது மச்சான் பணம். அவங்க கிட்டேயே பணம் வாங்கி மாடு வாங் கறதா?" என்று தங்கமணி அழுத்த மாகக் கேட்டான்.

"அந்தப் பணமெல்லாம் வேண் டாம். அம்மாளுடைய மாங்கலியமும் அதுக்குப் பண்ணின தங்கக் கொடியும் இருக்குது. அவள் நினைவா அந்த ரண் டையும் இதுவரையிலும் வச்சிருக்கேன். அடிக்கடி எடுத்துப் பார்த்துக்கொள் வேன். இனி மாங்கல்யத்தை மட்டும் வச்சிக்கிட்டுக் கொடியை நாளைக்குக் காலையிலேயே வித்துட்டு கடாரியைத் திருப்பிப் பிடித்து வருவேன். கொடி எட்டுப்பவுனில் செஞ்சது. அதனாலே வேண்டியதுக்கு மேலேயே பணம் கிடைச் சுடும்," என்று தந்தை தம் மக்களின் கவலையைப் போக்க முயன்றார்.

அடுத்த நாள் மாலை சுமார் மூன்று மணி இருக்கும். இரட்டைமாட்டு வண்டி வாயிலுக்கருகே தயராக நின் றது. "அப்பா, கால் விரலை டாக்டரிடம் காட்டி நல்லாக் கவனியுங்க," என்று கூறிக் கொண்டே பாதங்களைத் தொட் டுக் கும்பிட்டுவிட்டு செல்லம்மாள் வண்டியின் அருகில் சென்றாள். சின்னு சாமிக் கவுண்டர் முத்துக்குட்டியைத் தம் கைளில் வாங்கினார். அந்தக் குட்டி விரென்று கத்தத் தொடங்கிற்று.

"அப்பா, புதுசா எடுத்தா முத்துக்குட்டி அப்படித்தான் கத்து வான். நான் எடுக்கிறேன் பாருங்க, அவன் உடனே சிரிப்பான்," என்று கபடமில்லாமல் கூறிக் கொண்டே தங்கமணி குழந்தையைத் தன் கை யில் வாங்கினான். "முத்துக்குட்டி சிரி பார்க்கலாம். தாத்தாவுக்கு உன் சிரிப் பைக்காட்டு," என்று கொஞ்ச ஆரம் பித்தான். குழந்தை சிரித்தது. சின்னு சாமிக் கவுண்டர் எவ்வளவு முயன்றும் தம் கண்களில் தாரை தாரையாக வழி யத் தொடங்கிய கண்ணீரை அடக்க முடியவில்லை.

மயிலைக் கடாரி தங்கமணியின் பாசிகள் சங்குகள் முதலிய அலங்கா ரங்களுடன் மஞ்சள் குங்குமத் திலகம் அணிந்து கம்பீரமாக நின்றது. கன்றுக் குட்டி கழுத்தில் கட்டிய மணியோசை யைக் கேட்டு மிரண்டு மிரண்டு தங்க மணியைப் பார்த்துத் துள்ளிற்று.

தங்கமணியின் மகிழ்ச்சியை அளவிட்டுச் சொல்ல முடியாது. அத்து டன் தன் தந்தை மீண்டும் எல்லாரு டைய மரியாதையைப் பெறுவார் என்ற நினைப்பும் அவன் உள்ளத்திலே கிளு கிளுத்துக் கொண்டிருந்தது.

இப்படிப்பட்ட அன்புக் குழந்தைகளோடு இருந்து இந்த ஆனந் தத்தை அடைய இதுவரை தவறிவிட்ட தற்காக தம்மைத் தாமே நொந்து கொண்டார்.

"தங்கம், போயிட்டு வர் றேன்," என்று சொல்லிவிட்டு செல்லம் மாள் அன்போடு அவனைப் பார்த்துக் கொண்டே வண்டியில் ஏறி அமர்ந் தாள். அவளிடம் குழந்தையைக் கொடுக் கும் போது திடீரென்று அழுதே விட் டான் தங்கமணி. பிறகு சமாளித்துக் கொண்டு, "முத்துக்குட்டி. டேய், என்னை மறந்துடாதே. எங்கே சிரி பார்க் கலாம். நான் வளர்த்த கடாரியின் பாலைக் குடிச்சு நல்லா இருக்கணும்," என்று குழறிக் குழறிக் கூறினான் அந்தத் தங்கத் தம்பி.

வண்டி புறப்பட்டது. தங்க மணி வளர்த்த கடாரி இப்பொழுது முதல் கன்றை ஈன்ற இளம் பசுவாகப் பின்னால் நடந்தது. அதன் கன்று அங்கு மிங்கும் ஓடுவதும், தாயிடம் வருவது மாக ஓட்டிச் செல்லும் ஆளுக்கு வேடிக் கை காட்டிக் கொண்டு சென்றது.

கடாரி ஒரு முறை பின்னால் திரும்பிப் பார்த்தது. தங்கமணி கூட வரவில்லையே என்று அது நினைத்ததோ என்னவோ, யார் சொல்ல முடியும்?

Funding: Tattva Heritage Foundation,Kolkata. Digitization: eGangotri.

# ஹவுஸ் ஃபுல்

## ரா.கி.ரங்கராஜன்

## 21

"கல்கண்டு! கல்கண்டு!" என்று ஒருவர் கூவினர்.

"மல்லி! இங்கே இவருக்குச் சந்தனம் கொடப்பா!" என்று கல்யாணம் அழைத்தார்.

"சட்டையைக் கழற்றுங்கள்! இல்லாவிட்டால், மேலேயே கொட்டி விடுவேன்," என்று அங்கே மல்லி யாரோ ஒருவரை மிரட்டிக் கொண்டிருந்தான்.

நண்டும் சிண்டுமாய் முப்பது நாற்பது குழந்தைகள் குறுக்கும் நெடுக்கும் ஓடி, கட்டிடத்தையே இரண்டு செய்து கொண்டிருந்தன.

"மெதுவாய்! பார்த்து இறங்கு," என்றபடி கல்யாணம் வாசலுக்கு விரைந்து ஏணியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்.

'ஸ்வர்ணு நர்ஸரி ஸ்கூல்—இங்கிலீஷ் மீடியம்' என்று பளபளப்பாக எழுதப்பட்டிருந்த போர்டுக்கு மஞ்சள் குங்குமம் தடவி, பூச்சரம் தொங்க விட்டு விட்டு, ஏணி வழியே இறங்கிக் கொண்டிருந்த ஆள், "ஒண்ணும் ஆகாதுங்க, எஜமான். அம்மாவோட நல்ல மனசுக்கு எல்லாம் நல்லபடியாய்த்தான் நடக்கும்," என்றுன்.

"டேய், டேய்! இரைந்து சொல்லாதே. மல்லி ஐயா கோபிப்பார். அவராலேதான் இந்த ஸ்கூல் இன்றைக்கு ஆரம்பமாகிறதாக்கும்! அம்மாவோட பங்கு பூஜ்யம்!" என்றுர் கல்யாணம் சிரித்துக்கொண்டே.

"இந்தாருங்கள், உங்கள் வாய்க்குச் சர்க்கரை!" என்று அவரிடம் சர்க்கரைத் தட்டை எடுத்துக் கொண்டு ஓடி வந்தாள் ஸ்வர்ணு. கூடியிருந்த விருந்தாளிகளும் பெற்றேர்களும் மனம் விட்டுச் சிரித்தார்கள்.

"அம்மாடி!" என்று வேடிக்கையாகப் பெருமூச்சு விட்டான் மல்லி. "நீங்கள் எப்போது தட்டைப் பிடிப்பீர்கள், எப்போது கழற்றிக் கொள்ளலாம் என்றுதான் காத்திருந்தேன்!" என்று கூறியவன், கல்கண்டுத் தட்டை ஸ்வர்ணுவிடம் தந்துவிட்டுக் கூட்டத்தினரைக் கடந்து, முன்னறைக்குச் சென்று, ஓர் ஆணியில் மாட்டி வைத்திருந்த ஸ்லாக்கை எடுத்தான்.

ஆனல் ஒரு கையை மாட்டிக் கொள்ளுமுன் கணவனும் மனைவியுமாக அவன் முன்னே வந்து மடக்கி வழி மறித்துக் கொண்டார்கள்.

"மல்லி! வீட்டில் விருந்து தயாராகிறது: ரொம்ப வேண்டப்பட்டவர்களுக்கு மட்டும். நீங்கள் பாட்டுக்குக் கிளம்பினல் என்ன அர்த்தம்?" என்று கோபித்துக் கொண்டாள் ஸ்வர்ணு.

"அதெல்லாம் ஓரடி நகரவிட மாட்டேன்!" என்ற கல்யாணம், சட்டையை அவன் மாட்டிக் கொள்ளாதபடி பிடித்துக் கொண்டார்.

---

**... மல்லி. நல்லவனயும் பொறுப்புள்ளவனயும் இருக்கப் போவதாகப் புறப்படுகிறவர்களில் முக்கால் பங்கு பேர்வழிகள் அசடுகளாயும் மக்குகளாயும் முடிவதன்றே...**

''ஸாரி! இவ்வளவு நேரம் இருக்கவில்லையா? காலேஜுக்குப் போக வேண்டும்,'' என்றான் மல்லி.

''காலேஜ்! இன்றைக்கு லீவு போடும்படி சொன்னேனே?'' என்று கல்யாணம் ஆச்சரியப்பட்டார்.

''நீங்கள் சொன்னால் போட்டு விடுவேனா?'' என்று சிரித்தான் மல்லி. ''போன டர்மில் ஏகப்பட்ட நாள் நான் ஆப்ஸண்ட். இந்தத் தடவை லீவே எடுக்காமல் சரிபண்ணி விடலாமென்று எண்ணியிருக்கிறேன். அத்தோடு, இங்கிலீஷ் புரொபசர் ஸ்பெஷல் கிளாஸ் வைத்திருக்கிறார். கட்டாயம் போயாக வேண்டும்,'' என்றான்.

''விட்டு விடுங்கள் அவரை,'' என்று கணவனிடம் கூறினாள் ஸ்வர்ணா. ''படிப்பைக் காரணம் காட்டும்போது, நாம் குறுக்கே நின்று கெடுக்கக்கூடாது. எனக்குத் தெரிந்து, இத்தனை நாள் பழக்கத்தில், இப்போதுதான் அவர் தன் காலேஜையும் படிப்பையும் பற்றிப் பேசுகிறார். இது ஒரு நல்ல மாறுதல்.''



''கரெக்டாய்ச் சொன்னீர்கள், ஸ்வர்ணா அக்கா! 'நீ பிறர்மீது பன்னீர் தெளித்துக் கொண்டிருந்தால் உன்மீதும் சில துளிகள் விழும்' என்று ஒரு பழமொழி சொல்வதுண்டு இல்லையா? அதுதான் என் விஷயத்தில் நேர்ந்திருக்கிறது. வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் பொறுப்பும் வேண்டுமென்று நீங்கள் பிடிவாதமாக இந்தப் பள்ளிக்கூடத்தை ஆரம்பிப்பதை என் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்த பிறகும் எனக்கு ஒரு விழிப்பு ஏற்படாமல் இருக்குமா? காலேஜ் கல்வியை நானும் ஸீரியஸாக எடுத்துக் கொள்கிறேன் இப்போதெல்லாம்.''

அவனை அதிசயத்துடன் பார்த்த வண்ணம், ''போய் வா,'' என்று ஸ்லாக்கின் பிடியை விட்டார் கல்யாணம். ''எனக்கு ஒரு பயம்.''

''என்ன சார்?''

''நல்லவனாயும் பொறுப்புள்ளவனாயும் இருக்கப் போவதாகப் புறப்படுகிறவர்களில் முக்கால் பங்குப் பேர்வழிகள், அசடுகளாயும் மக்குகளாயும் முடிவதுண்டு. உன் தமாஷான, லவ்லியான சுபாவம் போய்விடக் கூடாது.''

''பயப்படாதீர்கள். எந்தப் புலியும் தன் புள்ளிகளை மாற்றிக் கொள்ளாது!'' என்று பதிலளித்துவிட்டுப் புறப்பட்டான் மல்லி.

அடுத்த தெருவில் திரும்பியிருப்பான். ஒரு சிறிய கும்பல் அவன் நடையைத் தடுத்தது.

ஒரு காரும் ஒரு சைக்கிளும் அந்த நாற்சந்தியில் லேசாக உரசிக் கொண்டு விட்டன. ஒருவருக்கும் ஒரு ஆபத்தும் இல்லை. ஆனால் சைக்கிள்கார இளைஞன் சத்தம் போட்டுக் கூட்டம் சேர்த்திருந்தான்.

காரில் இருப்பவரைக் கவனித்தான் மல்லி.

''ஹலோ மாமா!'' என்றான் உடனே.

பாவம், துணை யாருமின்றித் தனியாகச் சிக்கிக் கொண்டிருந்த கிருஷ்ணப்பா, ''மல்லி! நல்ல சமயத்துக்கு வந்தாயப்பா!'' என்றார், முகத்தில் முத்திட்டிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டே.



சைக்கிளில் சற்றே வளைந்திருந்த முன் சக்கரத்தை நேராக்கித் தந்துவிட்டு, ''என்னத்துக்கப்பா சும்மா கூச்சல் போடுகிறாய்? சைக்கிளுக்கு ஒரு டாமேஜும் இல்லை. போய்ச் சேர்,'' என்று ஓர் அதட்டல் போட்டான் மல்லி.

சைக்கிள் வாலிபன் முணுமுணுத்துக் கொண்டே அகன்றதும் கூட்டமும் கலைந்தது.

''ஏறிக்கொள். உன் வீட்டுக்குத்தான் போகிறேன்,'' என்று கிருஷ்ணப்பா அழைத்தார்.

''காலேஜுக்குப் போக வேண்டும். ஆனால் சாப்பிடாமல் போனால் அத்தை கோபிப்பாள்,'' என்று சொன்னவாறு காரில் ஏறிக் கொண்டாள் மல்லி.

ஆனால் முன்புறத்தில் ஏதோ ஒரு பெரிய காகிதப் பார்சல் கிருஷ்ணப்பாவின் அருகில் இருந்தது. அட்டை போலத் தோன்றியது. பழைய நியூஸ் பேப்பரால் மூடி, ட்வைன் நூல் போட்டுக் கட்டியிருந்தார். என்னவாயிருக்கும் என்று மல்லிக்குப் புரியவில்லை. பின் ஸீட்டில் அமர்ந்து கொண்டான்.

காரைச் செலுத்தியபடியே கிருஷ்ணப்பா, தலையைச் சற்றுப் பின்பக்கம் சாய்த்து மல்லியைப் பார்த்தார் பெருமையுடன்.

''ரொம்பத்தான் மாறியிருக்கிறாய் நீ. உன் அத்தை உன்னிடம் எடுத்துக் கொண்ட அக்கறை வீண் போகவில்லை.''

''அத்தையா! என்னிடம் அக்கறை கொண்டார்களா?''

கிருஷ்ணப்பா சுதாரித்துக் கொண்டார். அமிர்தத்தம்மாள் சொன்

வதையெல்லாம் இவனிடம் சொல்லலாமோ கூடாதோ என்றெண்ணியவராக, "உன் அத்தைக்கு உங்கள் எல்லோர் மீதும்தான் அக்கறை. அப்பா உயில் எழுதியபடி நீயும் உன் அண்ணனும் மாறி விடுவீர்கள் என்று தோன்றுகிறது," என்றார்.

"காமேசுவரியும்தான், திருச்சிக்குப் போயிருக்கிறாள். சாதாரணமாய் இரண்டே நாளில் திரும்பி விடுகிறவள் இந்தத் தடவை ஒருவாரம் ஆகியும் வரக் காணோமே? கணவனுடன் சமரசம் ஆகிவிட்டதென்று நினைக்கிறேன்," என்றான் மல்லி.

"லட் அஸ் ஹோப் ஃபர் த பெஸ்ட்," என்ற கிருஷ்ணப்பா, "உங்கள் இருவரைப் பற்றிக்கூட நிச்சயமாய்ச் சொல்லமாட்டேன். ஆனால் தசரதன் ரொம்ப மாறிவிட்டான். சத்தியம் கூடச் செய்வேன்," என்றார்.

"உண்மை சார். அவன் டிஸ்பென்ஸரியில் தினம் இரண்டு பெஞ்சு அதிகப்படியாய்ப் போட்டுக் கொண்டே போகிறான். அப்படியும் தினத்துக்கு ஐந்து பேராவது நின்று கொண்டிருக்கிறார்கள்."

"அதனால்தான் அவனைக் கங்கிராசுலேட் பண்ணிவிட்டு, இந்தப் பரிசையும் தரலாமென்று போகிறேன்," என்ற கிருஷ்ணப்பா அருகிலிருந்த பார்சலைச் சுட்டிக் காட்டினார்.

"அது என்னவென்று அப்போதே கேட்க நினைத்தேன். ஏதோ படம் போலிருக்கிறதே சார்?"

"ஊம், ஊம்." என்று மர்மச் சிரிப்பு வெளிப்படுத்தினார் கிருஷ்ணப்பா. "அவ்வளவு சுலபமாய்ச் சொல்லி விடுவேனா ரகசியத்தை? நீதான் வருகிறாயே? பார் பொறுத்திருந்து."

"ஸ்பெஷல் வகுப்பு இருக்கிறது போக வேண்டும். ஆனால் இந்தப் பார்சல் மர்மத்தை அறிந்து கொள்ளாமல் போக மனம் வரவில்லை," என்றான் மல்லி.

தசரதனின் டிஸ்பென்ஸரியில் அப்போதுதான் கூட்டம் வடிந்து கொண்டிருந்தது. இருந்தாலும் மூன்று நாலுபேர் காத்திருந்தார்கள். ஐந்தாவதாக உட்கார்ந்து கொண்டார் கிருஷ்ணப்பா, தமது பெரிய காகிதப் பார்சலுடன்.

"காலேஜுக்கு நேரமாகிறது, சார். பார்சலில் என்னவென்று சொல்லி விடுங்கள். போய் விடுகிறேன்," என்று மல்லி மன்றாடிப் பார்த்தான். நடக்கவில்லை.

கன்ஸல்ட்டிங் அறையினின்று வெளிப்பட்ட தசரதன், "ஹலோ மாமா!" என்று வரவேற்றான் கிருஷ்ணப்பாவை உற்சாகத்துடன். "என்ன இது, இத்தனை நாளும் நீங்கள் மட்டும்தான் வைத்தியம் செய்து கொண்டிருந்தீர்கள். இப்போது என்னென்னவோ பார்சலெல்லாம் கொண்டு வருகிறீர்களே?"

"இது உனக்கு ரொம்ப அறிமுகமான பேஷண்ட். இவர்களையெல்லாம் கவனித்து விட்டு வா. கடைசியாக இதைப் பார்க்கலாம்," என்றார் கிருஷ்ணப்பா.

தசரதன் சுறுசுறுப்பாக எல்லா நோயாளிகளையும் பரிசோதித்து மருந்து கொடுத்து அனுப்பினான். பிறகு கிருஷ்ணப்பாவை நெருங்கி, "உங்கள் பேஷண்ட்டைப் பிரியுங்கள்," என்றான்.

கிருஷ்ணப்பா பிரித்தார். அது ஒரு புன்கப்படம்தான். கண்ணாடி சட்டம் போடப்பட வேண்டியது.

"புரொபசர் பெரிய



## 'கப்' என்று பொருந்தியது!

அன்பர் ஒருவரின் இல்லத்தில் விருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார் திரு. கி. வா. ஜ. ரசம் ஊற்றியபோது இலையில் அது ஓட ஆரம்பித்தது. அவரை உபசரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த அந்த வீட்டு இல்லத்தரசி, அருகிலிருந்த சிறுமியிடம், "சீக்கிரம் போய் 'கப்' எடுத்துக்கொண்டு வா. ஊற்றிக்கொடுக்கலாம்," என்று துரிதப்படுத்தினார். கி. வா. ஜ. நிதானமாக! "அதற்கென்ன அவ்வளவு அவசரம், நன்றாக ஓடினால் எப்படியும் 'கப்' கொடுத்துத்தானே தீரவேண்டும்!" என்றார்,

—பி. ஜயகௌரி

நாயகம்!'' என்று கூவினான் தசரதன் வியப்புடன்.

''ஆமாம், அவரேதான். இவர் மட்டும் அன்று உதவி செய்திராவிட்டால், நீ மெடிகல் காலேஜுக்குள் புகுந்திருக்கவும் முடியாது. இன்று டாக்டராக வந்திருக்கவும் முடியாது. நினைவில்லையா?'' என்றார் கிருஷ்ணப்பா.

தசரதன் தலையைக் குனிந்து கொண்டான். ''ஆமாம் மாமா. அப்பாவின் நண்பர் என்பதால் எவ்வளவு அவுட் ஆஃப் வேயெல்லாம் போய் எனக்குச் சிபாரிசு செய்து இடம் வாங்கித் தந்தார். பிறகுகூட, எனக்கு வகுப்பு எடுக்கும் போதெல்லாம் என்னிடம் எவ்வளவு தனிப்பட்ட அக்கறை செலுத்தினார்!''

''பேஷ்! இவ்வளவு தூரம் நீ நினைவு வைத்திருப்பதே பெரிய விஷயம். உன்னுடைய முதல் டிஸ்பென்ஸரியில் அவருடைய படம் இருக்கவேண்டுமா வேண்டாமா?''

''கட்டாயம், மாமா, கட்டாயம்.''

''இந்தா அப்படியானால். இதற்காகத்தான் என் சொந்தச் செலவில் என்லார்ஜ்மெண்ட் எடுத்து வந்தேன். கண்ணாடி சட்டம் உன் பொறுப்பு! வரட்டுமா?'' கையை ஆட்டிக் கொண்டே காரில் திரும்பி விட்டார் கிருஷ்ணப்பா.

தசரதன் மேஜையடியில் மௌனமாக உட்கார்ந்து கொண்டான். டிராயரைத் திறந்து எதையோ உற்றுப் பார்த்த வண்ணம் வாய் பேசாதிருந்தான்.

''என்ன தசரதன்?'' என்று நிசப்தத்தைக் கலைத்தாள் மல்லி.

''ஒன்றுமில்லை.. புரொபசர் பெரியநாயகத்தின் படம் மட்டும் மாட்டினால் போதாது. இன்னொரு படமும் மாட்ட வேண்டும் இங்கே. கல்வி கற்றுத் தந்ததோடு பெரியநாயகத்தின் பங்கு முடிந்து விட்டது. ஆனால் இங்கே வந்து, இதே இடத்தில் என்னுடன் மன்றாடி என் மனத்தில் உற்சாகம் கொப்புளிக்கும்படி பண்ணிய நபர்.''— டிராயருக்குள் இருந்த ஒரு சிறிய புகைப்படத்தை வெளியிலெடுத்து மேஜைமீது போட்டான் தசரதன்— ''இதோ இவள்தான்.''

''மாதவி!'' மிதமிஞ்சிய வியப்புக் காரணமாகக் கிசுகிசுப்பாக வெளிப்

பட்டது மல்லியின் குரல்:

"பார்த்தாயா? அத்தை ரொம்ப ரகசியமாக வளர்த்து வரும் இந்தச் சுவீகாரப் புத்திரியைப் பற்றி நீகூடத் தெரிந்து வைத்திருக்கிறாய். நான்தான் முட்டாள். கொஞ்சம்கூட நினைத்துப் பார்க்கவில்லை...."

'அத்தை ரகசியமாக வளர்த்து வருகிறாள்..!' மல்லிக்கு எல்லாமே புதிராக இருந்தது. "இவளை நீ எங்கே எப்போது சந்தித்தாய்?"

"வாழ்க்கையில் வெறுப்படைந்து விஷம் குடித்து, தற்கொலை செய்து கொள்ளவிருந்தாள் இவள். அப்போது என்னை அத்தை அழைத்துப் போனாள். என்னால் முடிந்ததைச் செய்தேன். காப்பாற்றினேன். அதற்குப் பிறகு இரண்டொரு முறை அவள் இங்கே வந்திருந்த பொழுது இந்தப் புகைப்படம் எடுத்தேன்."

மல்லியை ஒரே ஒரு சந்தேகம் அரித்துக் கொண்டிருந்தது. "இவள் தனியாகவா இருந்தாள்? கணவன் கிணவன் யாரும் கூட இருக்கவில்லையோ?"

"சே. அபத்தம். கல்யாணமான பெண்ணின் போட்டோவைப் போய் நான் எடுத்து வைத்திருப்பேனா?"

தசரதன் பேசப் பேச மல்லி மெதுவே நழுவி வெளியே வந்தான். ஒரே ஓட்டமாக பங்களாவுக்கு ஓடி சமையலறையில் வேலையாய் இருந்த அத்தையின் முன்போய் நின்றான்.

"அத்தை! உன் ஆதரவில் மாதவி இருந்து வருகிறாள் இத்தனை நாளும்! என்னிடம் சொல்லவேயில்லையே?" என்று பரபரத்தான்.

அமிர்தத்தம்மாள் அமைதியாகத் தன் வேலையைப் பார்த்தவாறு, "ஏன் அவளிடம் என்ன திடீர் அக்கறை வந்தது உனக்கு? நீதான் வேறு யாரோ ஒரு பெண்ணோடு கொஞ்ச நாளாகச் சுற்றிக் கொண்டிருக்கிறாயாமே? மாதவி உன்னைப் பார்த்துக் கேட்டபோதுகூட, 'என்னை மறந்து விடு' என்று சொன்னாயாமே?"

அவள் சொன்னதன் பொருளைப் புரிந்து கொள்ள மல்லிக்குச் சில விநாடிகள் பிடித்தன. "இல்லை, அத்தை.. வந்து...." என்று வார்த்தைகளைத் தட்டுத் தடுமாறிப் பிடிப்பதற்குள் அத்தை குறுக்கிட்டாள்.

"நீ நல்ல பிள்ளையாய், பொறுப்பாய் மாறிக் கொண்டிருக்கிறாய் என்று நினைத்தால்...."

"ஐயோ, அத்தை! நான் அப்படி மாறியதால்தான் 'என்னை மறந்துவிடு' என்று சொன்னேன். அவள் கல்யாணமானவள் என்று எண்ணி, இனி என்னைப் பற்றிய நினைவே இருக்கக் கூடாதென்று அவளிடம் சொன்னேன். நீ வேறு என்னென்னவோ ஏற்பாடுகள் பண்ணியிருக்கிறாய் என்றதும், மாதவிக்குத் திருமணம் ஆகவில்லை என்பதும் இப்போதல்லவா புரிகிறது!"

"நீ யாரோ ஒரு பெண்ணோடு வந்தாயாமே, வீட்டுக்காரர் வீட்டுக்கு?"

"அவள் என் தங்கைமாதிரி. ஸ்வர்ணா என்று பெயர். நர்ஸரி ஸ்கூல் நடத்துகிறாள். இன்றுதான் ஆரம்பவிழா. நான் எல்லா உதவிகளும் செய்துகொடுத்துவிட்டு வருகிறேன்...."




அமிர்தத்தம்மாள், அவன் கூறுவதை நம்புவதா வேண்டாமா என்று குழம்பிக் கொண்டிருந்த நேரத்தில்—

தடதடவென்று உள்ளே வந்தான் தசரதன். "அத்தை! திருச்சியிலிருந்து தந்தி வந்திருக்கிறது. மாப்பிள்ளைக்கு ரொம்ப உடம்பு சரியில்லையாம்."

ஏறத்தாழ அதே நேரத்தில், திருச்சி மருத்துவ மனையில், கவலையின் வடிவமாகக் காட்சியளித்த காமேசுவரிக்கு, ராம்தாஸின் மனைவி செல்லம் தன் கதையை விவரித்தவாறிருந்தாள்.

(தொடரும்)

# சிறுவர் சிறுமியருக்கு வித விதமான ஷர்ட்டுகள், புஷ் ஷர்ட்டுகள், அரை நிஜார்கள், ஃபிராக்குகள், பள்ளிச் சீருடைகள், மற்றும் குழந்தைகளுக்கு பாபா சூட்டுகள் - இவைகளை பல ரகங்களில் அளிப்பது யார்?

## சாம்ஸன்ஸ் சந்தேகமேயில்லை!

**கண்ணைக்கவரும் பிரிண்டுகள், அழகுமிளிரும் செக் மோஸ்தர்கள், வண்ணவண்ணத் துணிகளில் தயாரிக்கப்படுகின்றன.**

- ஆடவருக்கு ஷர்ட்டுகள், புஷ் ஷர்ட்டுகள், ட்ரௌசர்கள் ரூ. 6லிருந்து ரூ. 50 வரை.
- குழந்தைகளுக்கு பைஜாமா, அரை நிஜார், ஷர்ட்டுகள், புஷ் ஷர்ட்டுகள், ட்ரௌசர்கள், பாபா சூட்டுகள், ஃபிராக்குகள் ரூ 3 லிருந்து ரூ. 25 வரை.
- காட்டன் மற்றும் டெரீன்/காட்டன் ஷர்ட்டுகள், மீடியம் மற்றும் ஃபைன் காட்டன் ட்ரௌசர்கள், டெரீன் மற்றும் டெரீன்/காட்டன் ட்ரௌசர்கள், பாபலின், டிரிப்-டிரை, கைசெவு மற்றும் பிரிண்டட் ஷர்ட்டுகள், புஷ் ஷர்ட்டுகள்.
- பகட்டான பிரிண்டுகள், ரம்மியமான கலர்கள் நவீன ஸ்டிரைப்புகள், கட்டங்கள்








IAM-B.D.M. 1095.

தி பெங்களூர் டிரெஸ் மானுபாக்சரிங் கம்பெனி பிரைவேட் லிமிடெட், பெங்களூர்-27

வர்த்தக விசாரணைகளை, கீழ்காணும் (செங்கற்பட்டு, வடஆற்காடு ஜில்லாக்கள் தவிர) எமது தமிழ்நாட்டு ஏஜெண்டுகளுக்கு அனுப்பவும்.

**எஸ். முகேஷ் & கம்பெனி,**

12/8, கந்தப்ப ஆசாரி தெரு, வேப்பேரி, மதராஸ்-7

# ஏங்களுக்கா தெரியாது?

நான் கண்டுபிடித்து விட்டேன். பொங்கல் சிறப்பிதழில் ஆரம்பமாகப் போகும் தொடர்கதையின் ஆசிரியர் டி. துரைசாமி, அல்லது, சுஜாதா, அல்லது ஜ. ரா. சுந்தரேசன், அல்லது, புனிதன், அல்லது....

கோம்பை ஆர். உதயகுமார்

**பட்டியலைத் திருத்துக**

முப்பத்தொன்பது வயதாகியிருந்த மனுபெஹனை ஒன்பது வருடங்கள் குறைத்து முப்பது என்று வெளியிட்டுள்ளீரே, அவரையும் நடிகைகளின் பட்டியலில் சேர்க்கும் எண்ணத்தோடா?

பெங்களூர் 1 வே. சு. பிரபாகரன்

**ஒரு வருட வித்தியாசம்**

காந்திஜியைக் கண்டு வியந்து பெஸண்ட் அம்மையார் போற்றியது 1914'ல் அல்ல. 1915'ல். காந்திஜி தென் ஆப்பிரிக்காவை விட்டு இந்தியாவுக்கு இறுதியாக வந்து சேர்ந்தது 1915'ம் ஆண்டு ஜனவரித் திங்கள்தான்.

மதுரை வி. ஜி. ஸ்ரீனிவாசன்

**கண்ணைப் போட்டார் ஷோ?**

நடிகையின் பெயரைக் குறிப்பிடாமல் (25-12-69 இதழ் அட்டையில்) கண்ணை அழகாக வைத்துக் கொள்வது எப்படி? நடிகை சந்திரகாந்தா என்று ஒரு வரி பெயர் போட என்ன கஞ்சத்தனம்?

குண்டக்கல் எல். எம். பிரான்ஸிஸ்

**மஞ்சள் கொலையாவது சிவப்புக்கொலையாவது?**

மஞ்சக்கொல்லையிலிருந்து உமக்கு வந்த கடிதத்திலாவது உமது விலாசம் இருந்ததா? இல்லை, அதுவும் ஒரு மர்மக் கதையா?

திருச்சி 8 சிவப்பு முக்கோணம்

மஞ்சக்கொல்லை மர்மம் போட்டு ஒரு பக்கத்தை வீணடித்து விட்டீர். கர்மம்....

புதுப்பேட்டை வே. பெருமாள்

**அம்மாஞ்சி மார்க் அகராதி**

படத்தின் பாடலாசிரியர்தான் புரியாமல் எழுதியிருக்கிறார் என்றால் தாங்களுமா? தயவு செய்து குமுத அகராதியிலாவது என்ன அர்த்தம் என்று பார்த்துச் சொல்லவும்: சுக்கு மாக்கு சக்கு மாக்கு மானியா.

தேனி ஜி. கண்ணன்

என் மனைவி அத்தை மகள் சினிமாவுக்கு அழைத்தாள். நான், 'குமுதம் விமரிசனம் படித்தாயா?' என்று கேட்டேன். அவள் வெடுக்கென்று, 'அது கெடக்கு. அசட்டு அம்மாஞ்சி மக்கு பிளாஸ்திரி!' என்றாள்.

திருச்சி 2 பி. ரா. குருசாமி

**வேறு வேலையே இல்லையா?**

கதாசிரியர்களுக்கு வேறு கதைகளே கிடைக்காதா? உண்மையில் நடந்த நிகழ்ச்சிகளையே கதையாக எழுதித் தள்ளுகிறார்களே! முன்பு ஒரு 'ரவீந்திர சரோபர்.' இப்போது 'முகத் திரை.' ஏழெட்டு மாதங்களுக்கு முன்பு பாகிஸ்தானில் நடந்த உண்மை நிகழ்ச்சியின் தழுவலே 'முகத்திரை.'

திருநெல்வேலி 1 ரைகாஜு முகம்மதலி






# ஆயிரத்தில் ஒரு வார்த்தை

அகமதாபாத் காங்கிரஸ் மாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டவர் ஆற்றிய சொற்பொழிவுகளிலே நிதானத்துக்கும், நெடுங்கண் நோக்கிற்கும் அமைதியாகச் சிந்திப்பவர் எவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பகுத்தறிவுக் கண்ணோட்டத்துக்கும் ஓர் உதாரணமாகத் திகழ்ந்தது எது என்று கேட்டால், அனேகமாகத் திரு. கிருபளானியுடைய பேச்சு ஒன்றைத்தான் குறிப்பிட வேண்டியிருக்கும்.

சிண்டிகேட் தலைவர்களுக்கு அவர் கொடுத்த புத்திமதி, மிகச் செம்மையானது.

''புரட்சித் திட்டங்களைத் தயாரிக்கும் விஷயத்தில், திருமதி இந்திரா காந்தியின் கூட்டத்தோடு போட்டி போட வேண்டாம்!'' என்று அவர் யோசனை சொல்லியிருக்கிறார்.

நாட்டின் உண்மையான நலனை சிண்டிகேட்காரர்கள் மனத்தில் கொண்டவர்களாக இருப்பார்களேயானால், அவர்கள் சற்று மிதமாக நடந்து கொள்வது தான் நல்லது.

திருமதி இந்திரா, ஏற்கெனவே இடதுசாரி கோஷ்டியில் இருக்கிறார். ''நீங்கள் எட்டடி பாய்ந்தால், நாங்கள் பதினாறடி பாய்கிறோம்,'' என்று சவால் விட்டுக் கொண்டு சிண்டிகேட்காரர்கள் திட்டம் வகுப்பார்களேயானால், அவர்களை மிஞ்ச வேண்டும் என்ற எண்ணத்தில், திருமதி இந்திரா முன்னைக் காட்டிலும் இன்னும் அதிகமாக இடது பக்கம் சாய நேரிடும் அல்லவா? கம்யூனிஸ்டுகளோடு இன்னும் நெருக்கமாக அவர் கூட்டுச் சேர வேண்டியிருக்கும் அல்லவா?

அது நாட்டுக்கு நன்மை பயக்குமா?

''சோஷலிஸ்டு கோஷங்கள் போடுவதில் பிரதமரோடு நீங்கள் போட்டி போட்டால், நாட்டையே அழித்தவர் ஆவீர்கள்!'' என்கிறார் திரு. கிருபளானி.

ஆயிரத்தில் ஒரு வார்த்தை.






# ஏமாளித்தனமா? எச்சரிக்கையா?

அயல் நாட்டுத் துறை அமைச்சர் திரு தினேஷ்சிங், அண்மையில் ஒரு கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

"சீனாவோடு, மறுபடி சுமுகமான உறவு ஏற்படுத்திக் கொள்ளத்தான் நாம் விரும்புகிறோம். ஆனால் நாம் மட்டும் விரும்பிப் பயன் என்ன? சீனாவுக்கு அந்த எண்ணம் இருப்பதாகத் தெரியவில்லையே!" என்று அவர் வருத்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

ஒருவகையில் பார்த்தால், இது மகிழ்ச்சி அடைய வேண்டிய விஷயமே தவிர, வருந்த வேண்டிய விஷயம் அல்ல. சீனாவின் இரண்டு முகத்தையும் பார்த்திருக்கிறோம். புருவத்தை நெரித்துக் கொண்டு சண்டைக்கு வந்த அசல் சீனா, வாய் நிறையச் சிரித்துக் கொண்டு, 'பாய் பாய்' கோஷமிட்ட போலி சீனா— இரண்டு சீனாக்களிடமும் நெருங்கிப் பழகிய அனுபவம் நமக்கு உண்டு.

யோசித்துப் பார்க்கையில், சிரித்த முகச் சீனாவைக் காட்டிலும், சீற்றம் கொண்ட சீனாவே பரவாயில்லை என்று தோன்றுகிறது.

அது கோபமாக இருந்தால், அதன் உள்ளம் நமக்குப் புரியும் அல்லவா? எந்த நிமிடத்தில் நம்மீது பாயுமோ என்று எச்சரிக்கையோடு இருப்போம் அல்லவா?

எச்சரிக்கையோடு இருப்பது தொல்லைதான். ஆனால், ஏமாளிப்பட்டம் கட்டிக் கொள்வதைக் காட்டிலும், எச்சரிக்கையின் சுமையைத் தாங்கிக் கொள்வது புத்திசாலித்தனம்.

# கண்டேன் அவளை...

பலவருடங்களுக்குப் பிறகு அவளைப் பார்த்தேன்

ரீகல் தியேட்டரில் ஹவுஸ் ஃபுல் போர்டு தொங்கியது. சற்றுத் தள்ளி இருந்த ரிவோலியில் முயற்சி செய்ய எண்ணித் திரும்பினேன்.

என் பிடரி குறுகுறுத்தது. யாரோ என்னை வெறித்து நோக்குகிறார்கள். பக்கவாட்டில் பார்வையைச் செலுத்தினேன். ஸ்டான்டர்டு ரெஸ்டரன்ட் வாசலில் நின்றபடி அந்தப் பெண்மணி என்னை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். இலேசாக முறுவலிக்கிறாளே.

எனக்குப் புல்லரித்தது. சே. என்ன பைத்தியக்காரன் நான். 48 வயதாகிவிட்டதால் கிழவனாகிவிட்டதாக நான் எண்ணியது எவ்வளவு அசட்டுத்தனம். சட்டைக்காலரைத் தூக்கிவிட்டுக் கொண்டேன். அருகே இருந்த பூட் பாலிஷ் பையனிடம் கால்களை நீட்டினேன். அந்த இடத்தை விட்டு நகர மனமில்லை. அவளுடன் இன்று பேசியே ஆகவேண்டும்.

கன்னாட் பிளேஸ் எங்கும் திடீரென்று நியான் விளக்குகள் எரிந்து வண்ண ஜாலங்களை வாரித் தெளித்தன. என் மனம் இருபது வருடம் பின்னோக்கித் தாவியது. அன்று—

சுருள் கிராப்பும், நீண்ட நாசியும், அடர்த்தியான மீசையுடனும் எவ்வளவு அழகாக இருந்தேன். எத்தனை பெண்களின் இதயங்களைப் படபடக்கச் செய்திருக்கிறேன்!

அம்புஜத்தின் நினைவு அலை மோதுகிறது. அவளும் நானும் அனுபவித்த சுகங்கள், பார்த்த படங்கள், சுற்றிய இடங்கள், ஜோடிப் புறுக்களாகக் காதல் வானில் சிறகடித்துப் பறந்த நாட்கள் மனத்திலே உருவெடுத்தன.

முதுகெலும்பற்ற கோழை நான். என் தந்தையிடம் தைரியமாகப் பேசத் தெரியாதவன். சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டேன். வைதிகத்தில் ஊறித் திளைத்திருந்த அவர், பத்துப் பொருத்தங்களும் நன்றாக அமைந்திருக்கிறது என்பதற்காகக் கல்யாணியை என் தலையில் கட்டினார். மறுத்துப் பேச வழியில்லாமல் தாலி கட்டினேன். இரண்டே வருடம்தான் என் இல்லற வாழ்க்கை நிலைத்தது. கேசவனை இந்த உலகில் பெற்றுவிட்டு உயிர் நீத்தாள்.

மனைவியைப் பறிகொடுத்து விட்டதற்காக நான் அலறிக் கதறவில்லை. மாறாக அம்புஜத்தைச் சுற்றியே என் மனம் வட்டமிட்டது. அவள் இப்போது எங்கே இருக்கிறாள்? கன்னிப் பெண்ணாக இருக்கிறாளா? கலியாணம் கழிந்த காரிகையாகி விட்டாளா? அப்பாவை எதிர்த்து தைரியமாக அவளைக் கைப்பிடித்திருந்தால் இந்நேரம் என் வாழ்வின் ஒளி எவ்வளவு பிரகாசமாகச சுடர்விட்டு எரிந்து கொண்டிருக்கும். இரண்டு வருடங்கள் அவளைத் தேடி நான் சுற்றாத இடம் இல்லை; அதற்காகச் செலவழிக்காத செல்வம் இல்லை. அம்புஜத்தைக் காணோம்.

கல்யாணி கேசவனை மட்டும் உலகத்தில் விடவில்லை; லட்சக்கணக்கான செல்வத்துக்கும் என்னை அதிபதியாக்கி விட்டுப்போனாள். அந்தச் செல்வத்தின் அருமையை இப்போதுதான் உணர முடிகிறது. கேசவன் இப்போது அமெரிக்காவில் படிக்க அதுதான் உதவி செய்கிறது.

நானும் என் மகனும் என்றுமே ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டது கிடையாது. சின்ன வயதில் போர்டிங் ஸ்கூலில் படித்தான். பிறகு சென்னைக் கல்லூரியில். அதற்கப்புறம் அமெரிக்காவில் கண்காணாத தேசத்தில். இந்த 20 வருடங்களில் நான்கு முறைதான் அவனைப் பார்த்திருக்கிறேன். பத்து நிமிடங்களுக்கு மேல் சேர்ந்து பேசியதே கிடையாது.

அவன் இப்போது திரும்பப் போகிறான். என்னுடன் சேர்ந்து வாழப் போகிறான். வினோதமான நினைவுகள். அவன் ஏன் வருகிறான்? அங்கேயே இருந்து தொலைத்தால் என்ன?

—பூட் பாலிஷ் பையன் பிரஷ்ஷின் கட்டையால் தரையில் சப்தப் படுத்தினான். அவன் வேலையை முடித்து விட்டான். "பச்சீஸ் பைசே," என்று நினைவு படுத்தினான். ஒரு நாலணா நாணயத்தை அவன் கையில் வைத்துவிட்டு நகர்ந்தேன்;

# கொஞ்சமும் மாறவே இல்லையே!

ஸ்ரீநிவாஸ்

சற்றுத் தூரம்தான் போயிருப்பேன். அந்தப் பெண்ணும் என்னைப் பார்த்தவாறே என் பின்னால் நகர்ந்தாள். ரோட்டைக் கடக்கும் இடத்தில் பச்சை விளக்கு எரிந்தது. ரோடிலே மோட்டார்களும், ஸ்கூட்டர்களும் வரிசையாகப் போய்க்கொண்டிருந்தன. நான் நின்றேன்.

அவள் என் அருகில் வந்து விட்டாள்.

"எக்ஸ்க்யூஸ்மி..நீங்கள்..?"

"யெஸ்...?" என்றேன்.. படபடக்கும் நெஞ்சோடு. அவளே பேசட்டும் என்பதற்காகக் காத்திருந்தேன்.

"நீங்கள்...நீங்கள் ஸ்ரீநிவாஸ் தானே?"

"ஆமாம். உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று வினவினேன்.

"இன்று காலையில் தான் டெல்லிக்கு வந்தேன் நான். சாயங்காலம் உங்கள் வீட்டிற்குப் போனேன். பக்கத்துப் போர்ஷன்காரர்கள் நீங்கள் சினிமாவுக்குப் புறப்பட்டுப் போனதாகச் சொன்னார்கள். முதன்முதலில் 'ரீகல்'க்குத்தான் வந்தேன். இங்கேயே உங்களைப் பிடித்துவிட்டேன்." எனக்கு வியப்பாக இருந்தது. யார் இந்தப் பெண்மணி? என்னைப்பற்றி எல்லாம் தெரிந்தவளாகப் பேசுகிறாளே. நின்று நிதானமாக அவளை உற்று நோக்கினேன்.

"ஸ்ரீநிவாஸ், இன்னும் என்னைத் தெரியலையா? நான்... நான்தான் அம்புஜம்!"

"வாட்? வாட் எ பிளசன்ட் சர்ப்ரைஸ்! நிஜமாகவா? என் கண்களை நம்ப முடியவில்லையே" என்று என்னையறியாமலேயே சந்தோஷத்தால் கூவினேன். இருபது வருடமாக அவளைப்பற்றிய நினைவுகள் கட்டுக்கடங்க நிலைத்து நின்ற உணர்வுகள் பிரவாகமாகப் படர்ந்து எழுந்தன.

"அம்புஜம், உன்னை நான் தேடாத இடமில்லை...."

"நான் கூடத்தான். கடைசியில் உங்களை நான் கண்டுபிடித்தேனு இல்லையா?" இரண்டு கைகளையும் குவித்துப் பிடித்தவாறு மகிழ்ச்சியுடன் கூறினாள்.

"அம்புஜம்...நீ கொஞ்சம் கூட மாறவேயில்லை. இன்னும் அதே மாதிரியே இருக்கிறாய்!"

"நீங்கள் மட்டும் என்னவாம்?"

எனக்குப் பெருமையாக இருந்தது. நான் காதலித்த பெண், என் ஆசை அம்புஜம், என்னிடம் ஒரு மாறுதலையுமே காணவில்லை.

"ஊம்...என்னை மன்னித்து விடு அம்புஜம்...உன்னைவிட்டு என்வாழ்வு



வேறுவிதமாக அமையும் என்று நான் எண்ணியதே இல்லை. தவறு முழுவதும் என்னுடையதுதான்...'' என கண்கள் கலங்கின.

''சே. என்ன இது பச்சைக் குழந்தை மாதிரி. யாராவது பார்க்கப் போகிறார்கள்....வருத்தப்படாதீர்கள்.''

எனக்கு மனத்துக்குப் பெருத்த நிம்மதியாக இருந்தது. இன்னும் அவள் எனக்காகக் கவலைப்படுகிறாள், ஆறுதலாகப் பேசுகிறாள். எங்கள் உறவு முறிந்துவிடவில்லை!

''டாக்ஸி!'' என்று திடீரென்று கை தட்டினாள். ஊர்ந்து வந்து கொண்டிருந்த மஞ்சள் நிறக்கார் எங்கள் அருகில் நகர்ந்துவந்து நின்றது.டிரைவர் கொடியை இறக்கியதும் கதவை நான் திறந்தேன். அம்புஜம் ஏறி உள்ளே அமர்ந்தாள். அவள் அருகில் அமர்ந்து கதவை மூடியதும் வண்டி புறப்பட்டது.

''அஜ்மகல்கான் ரோட் ஸே ஆகே சலோ, தேராபடா பாஞ்ச்,'' என்று டிரைவருக்கு என் வீட்டுக்குச் செல்லும் வழியை விவரித்துவிட்டு அருகிலிருந்த அம்புஜத்தை ஏறிட்டு நோக்கினேன். அவள் இதற்காகத்தான் காத்திருந்தவள் போல மடை திறந்தாற்போல பேசவாரம்பித்தாள். நான் குறுக்கிடவில்லை.

என் திருமணத்துக்கப்புறம் சரியாக ஆறுவது மாதம் சென்னையில்



உலகிலேயே விலை உயர்ந்த கார் எது?

மாண்டவர்டி 375எல்—என்பது! விலை கிட்டத்தட்ட ரூ. 2,20,500. (10 ஸ்டாண்டர்ட் கார்களின் விலை). இதை உருவாக்குபவர் சுவிட்சர்லாந்து நாட்டவரான 35 வயது பீட்டர் மாண்டவர்டி என்பவர்.

ஆசியாவிலேயே உள்ள இந்த இரண்டு (1966) கார்களில் ஒன்றை அண்மையில் இந்தி திரைப்பட நடிகை ஒருவர் ஸ்டேட் டிரேடிங் கார்ப்பரேஷன் மூலம் வாங்கியுள்ளார். விலை? ரூ. 2,00,000 இதில் காரின் மாஜி உரிமையாளருக்குக் கிடைப்பது ரூ. 94,000 தான். லட்ச ரூபாய்க்கு மேலே வரியாகப் போகிறது.

—கணேசன்.

அவள் கல்யாணம் நடந்தது. அவள் கணவர் இருதயக் கோளாறால் சென்ற வருடம் திடீரென்று இறந்துவிட்டார்.

"ஐ ஆம் ஸாரி டு ஹியர் இட்," என்று மெதுவாகச் சொன்னேன். உண்மையில் எனக்கு வருத்தமே இல்லை. மனைவியை இழந்தவன் நான்; கணவனை இழந்தவள் அவள். இருபது வருடத்துக் கப்புறம் எங்கள் வாழ்வு மறுமலர்ச்சி அடையப் போகிறது.

வீடு வந்ததும் அம்புஜம் இறங்கினாள். டாக்ஸி சத்தத்தைத் கொடுத்து விட்டுக் கதவைத் திறந்து விளக்கைப் பொருத்தினேன். நீலநிற ஒளி மங்கலாக அறையில் பரவியது.

"காப்பி சாப்பிடுகிறாயா அம்புஜம்?" என்று வினவினேன்.

"சமையலறை எங்கே இருக்கிறது? நான் தயார் செய்கிறேன்," என்று அவள் முன்னே சென்றாள்.

மங்கிய ஒளி மனத்துக்கு இதமாக இருந்தது. அது மட்டுமல்ல. என் முகச் சுருக்கங்களையும், மை தடவி கருமையாக்கப்பட்டிருந்த நரைத்த தலையையும் மறைக்க உகந்ததாகப்பட்டது.

காப்பி ஸெட் கலகலக்க உள்ளே வந்த அம்புஜம் மேஜையில் அதை வைத்து விட்டு சோபாவில் சாய்ந்து அமர்ந்தாள். காப்பிக் கோப்பையை என்முன் நீட்டினாள்.

"கொஞ்சம் ஆறட்டுமே!" என்றேன் நான். என் உடலில் பரவிய உஷ்ணமும் கொஞ்சம் ஆறட்டும் என்று தான் காத்திருந்தேன். இவ்வளவு வயதுக்கப்புறம் உணர்ச்சி வேகத்துக்கு அடிமையாகக் கூடாது. அவளே துவங்கட்டும் என்று அமைதியாகக் காத்திருந்தேன். அவளே பீடிகை போட்டாள்.

"ஆண் பிள்ளைகள் எப்படி வேண்டுமானாலும் இருக்க முடிகிறது. கவலைப்படவே அவசியமில்லை. பெண் என்கிறவள் மெல்லிய கொடி போன்றவள். ஆணைச் சுற்றிப் படர்ந்து, பூத்துக் காய்த்து குலுங்கி நிற்கவே ...டியவள். அவனன்றி அவளுக்கு வாழ்க்கையில் சுகமோ, நிறைவோ நிம்மதியோ கிடையாது. ஆனந்தம் எல்லாமே..."

"காதலிலும், கணவனிடத்திலும்தான்," என்று தைரியமாக அவள் கூறியதற்கு முத்தாய்ப்பு வைத்தேன்

அவள் காப்பியை அருந்தியவாறே என்னை ஏறிட்டு நோக்கினாள்.

---

## விஜயா சிவாஜியிடம் கேட்டது என்ன?



வாகு கலைக்கூடத்தில் 'சொர்க்கம்' படப் பிடிப்பு நடைபெற்றுக் கொண்டிருநதது.

சிவாஜி கணேசனும், விஜயாவும் நடிக்க வந்திருந்தார்கள்.

ஒளி அமைப்பு வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருந்த பொழுது சிவாஜி கணேசன் காலை நீட்டி அமர்ந்திருந்த நாற்காலியருகே விஜயா முறுவலித்தவாறே வந்து நின்றார்.

ஏதோ தன்னைக் கேட்க வந்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்ட சிவாஜி கணேசன், "என்னம்மா சொல்லு," என்றார்.

உடனே விஜயா வினயமாகக் குனிந்து சிவாஜியின் காதருகே ஏதோ ரகசியமாகக் கிசுகிசுத்தார்.

உடனே சிவாஜி, "இவ்வளவுதானே. இந்தாப்பா சண்முகம் (உதவி டைரக்டர்) என்னுடைய 'போர்ஷனை' அப்புறம் எடுத்துக்கலாம். இவங்களைத் தனியா எடுக்கற 'ஷாட்'டுகளை எடுத்துட்டு சீக்கிரம் அனுப்பிவையப்பா" என்றார்.

விஜயா சிவாஜியின் காதில் ரகசியமாகக் கூறிய விஷயம் எதைப் பற்றி? மகள் ஹேமாவிற்கு உடல்நலம் சரியில்லையென்றும், அதனால் உடனடியாக வீட்டிற்குப் போக வேண்டும் என்பதைத் யும்தான் அப்படி ரகசியமாகக் கூறினார்.

என்னதான் நட்சத்திரமானாலும் விஜயா ஒரு தாய் தானே!

—ரத்னம்

"உங்கள் பிள்ளை கேசவன் எப்போது திரும்புகிறான்?" மிகச் சாதாரணமாகக் கேட்டாள்.

"கேசவன்...?" தூக்கிவாரிப் போட அவன் பெயரை வினாக்குறியுடன் உச்சரித்தேன். என் மகன் கேசவனைப் பற்றி அம்புஜத்துக்கு எப்படித் தெரியும்?

"கேசவனைப் பற்றித்தான் கேட்கிறேன். அமெரிக்கா போயிருக்கிறானாமே? எப்போது திரும்பி வரப் போகிறான்? மதராஸில் இருக்கும் உங்கள் தமையனாரைப் பார்த்துத்தான் எல்லாவற்றையும் விசாரித்து அறிந்துகொண்டேன்."

என்னையறியாமலேயே எனக்கு உதறலெடுத்தது. கடைசியில் என்மகன் கேசவனால் என் வாழ்க்கையின் மறு மலர்ச்சியே கருகிவிடப்போகிறதா?

"கேசவனின் ஜாதகம் உங்களிடம் இருக்கிறதா? எனக்குத் தரமுடியுமா?" வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள்.

"ஜாதகமா? கேசவனுடையதா? எதற்கு?" என்று வெடித்துச் சிதறினேன்.

"என் பெண் மாலதியைத் தெரியுமல்லவா? இந்த வருடம் அவளுக்குப் பத்தொன் தாகிறது. ரொம்ப அழகாக தங்க விக்கிரகம் மாதிரி வளர்ந்திருக்கிறாள். நீங்கள் பார்த்ததில்லையே. கேசவனும் அவளும் அழகான ஜோடியாக அமைவார்கள். ஜாதகங்களைப் பார்த்துப் பொருத்தங்கள் அமைந்துவிட்டால், பையனும் பெண்ணும் நல்ல நாளில் ஒருத்தரைஒருத்தர் பார்த்துக் கொள்ளட்டுமே. நல்ல காரியத்தை ஒத்திப்போடக்கூடாது என்பதற்காக நானே டெல்லிக்குப் புறப்பட்டு வந்து நேரிலேயே ஜாதகத்தை வாங்கி வரலாம் என்று தீர்மானித்து வந்து விட்டேன்."

ஒரேயடியாகச் சோர்ந்து போய்விட்டேன் நான். இனி யாருக்காக வேஷம் போட வேண்டும்? சட்டைப் பையிலிருந்த மூக்குக் கண்ணாடியைத் தைரியமாக வெளியில் எடுத்து அணிந்து கொண்டு அம்புஜத்தைத் தெளிவாக உற்றுக்கவனித்தேன்.

அவள் கன்னங்களையும், கூழின் நடுவே ஆங்காங்கே இழைந்து சென்ற வெள்ளி மயிர்களையும் கண்ணாடி தெளிவாகக் காட்டியது.

---








FOR THE GUMS

# இந்தியாவின் ரேடியோக்கள் மற்றும் டிரான்ஸிஸ்டர்கள் தொழிலிலேயே அதிகமாக ஏற்றுமதிசெய்யும் மர்பி அளிக்கும்...



மினி மாஸ்டர் 4
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 220.00*



நம்நாட்டிலும், வெளிநாட்டிலும் டிரான்ஸிஸ்டர்களில் அதிகமாக விரும்பி வரவேற்கப்படுவது!



மினி பாய் 2
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 175.00*



ம்யூஸிஷியன்
மீடியம் வேவ்
ரூ. 125.00*

முஸாபிர்
3 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 283.00*

சில டிரான்ஸிஸ்டர்களே நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு சிறந்த பலனை அளிக்கிறது-கஷ்டத்தை குறைப்பது!

இதனாலேயே, இந்நாட்களில் மேலும் மேலும் அதிகமான ஜனங்கள் மர்பியையே விரும்பி வாங்குகிறார்கள். உண்மையாக 60,000 த்திற்கு மேற்பட்ட மர்பி-இந்தியா ரேடியோக்களும், அதன் கருவிகளும், சென்ற வருடம் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன-மேலும் 70,000த்திற்கு மேற்பட்ட ஆர்டர்கள் கைவசமுள்ளன.

இதை நீங்கள் படிக்கும்போதே, அண்மையில் தானாவில் துவக்கப்பட்ட மர்பியின் ... மேன் மேலும் தரமான டிரான்ஸிஸ்டர்கள் உற்பத்தியை ... து.

... சிப்பிடுவதை உங்களி... விடுகிறோம். அன் ...ம் சென்று இதன் ...த்தை ஒத்திட்டு ... பேரானந்






திரு. காமராஜுக்கும் திரு. சி. சுப்பிரமணியத்துக்கும் அருகருகே இடம் ஏற்பாடு செய்திருந்தார்களாம் விமானத்தில். பிறகு, சந்தர்ப்பத்தைக் கருதி, இருவருக்கும் வெவ்வேறு இடத்தில் ஸீட் கொடுத்தார்களாம்.

—செய்தி.

இருவரும் அருகருகே அமர்ந்து பேசிக் கொள்ளவும் நேர்ந்திருந்தால்—

சி. எஸ். : என்ன நீங்க இப்படித் தப்பு வழியிலே போறீங்க?

காமராஜ் : என்ன தப்பைக் கண்டுவிட்டே ... ...சாய்! இந் ... ... தப் ப்ளேன் அகமதாபாத் ... ...ரகிறதே?




வளர்ந்து கொடுப்-